














'அசோகா' பாக்குத் தூள் வாய்க்கு ருசி, மனதுக்கு ரம்யம்.

# கொலம்பியா ஸ்பெஷல் வெளியீடு!



## D.K. பட்டம்மாள்
பாடிய

இன்னிசைத் தமிழ்ப் பாட்டுகள்

GE.6082

**இனி ஒரு கணம் நின்னருள்**

GE.6045
குமரன்
திரைகடல்

GE.6001
யதுகுல திலக
அன்புடன்



10

## சரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 2 | இதழ் 25 — 1943 ஏப்ரல் 1 — சித்திரபானு ௵ பங்குனி ீ 19௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனைச் சம்பவங்கள்.




"அமெரிக்காவில் இந்தியக் காங்கிரஸுக்கு ஒரு பிரசார ஸ்தாபனம் இருக்கிறது" என்று ஸர் ஸாபருல்லாகான் சொல்லுகிறார். இது உண்மையானால் அந்தப் பிரசார ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயம் தற்சமயம் தியாகராஜ நகர் பஸ்லுல்லா ரோட் 48-ம் நம்பர் வீட்டில்தான் இருக்க வேண்டும் என்று கருதுகிறோம்! இந்தக் காரியாலயத்தைத் தன்னந் தனியாக நடத்திக் கொண்டிருப்பவர் ராஜாஜிதான். அமெரிக்கப் பத்திரிகைப் பிரதிநிதிகள் சுமார் நூறு பேர் இன்று இந்தியாவில் இருக்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் இந்தியக் கோரிக்கையின் நியாயத்தைத் தெளிவாக விளங்கச் செய்பவை மேற்படி 48-ம் நம்பர் வீட்டிலிருந்து இடைவிடாமல் வெளியாகும் ராஜாஜியின் அறிக்கைகளாகும். அவர்களில் பலர் ராஜாஜியை நேரில் பார்த்தும் விஷயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்கிறார்கள். சென்ற வாரத்தில் மேற்படி 48-ம் நம்பர் வீட்டுக்கு அமெரிக்கப் பிரஸிடெண்டின் பிரதிநிதி மிஸ்டர் வில்லியம் பிலிப்ஸ் விஜயம் செய்தபோது எடுக்கப்பட்ட இன்னும் சில படங்களை உள்ளே காணலாம்.

போட்டோ: ஆர். நாகராஜ ராவ்.



சென்ற சனிக்கிழமையன்று சேலம் மாடர்ன் தியேட்டர்ஸில் மனோன்மணி தினம் அதி விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இவ்வருஷத்தின் தலை சிறந்த இப் படத்தை வெற்றிகரமாகத் தயாரித்ததில் ஒத்துழைத்தவர்களுக்கும் சிப்பந்திகளுக்கும் மாடர்ன் தியேட்டர்ஸின் டைரக்டர்கள் ஒரு விருந்து அளித்தார்கள். தென்னிந்தியாவின் பல தியேட்டர்களும் அளித்த கோப்பைகளுடனும் ஷீல்டுகளுடனும் ஸ்ரீமான் டி. ஆர். சுந்தரமும் ஸ்ரீமதி சுந்தரமும் படத்தின் மத்தியில் காணலாம்.




# கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்


# என்ன சேதி?

## வீர சொர்க்கம்

"துரதிர்ஷ்டம் பிடித்த இந்த அடிமை நாட்டில் வாழ்வதைக் காட்டிலும் செத்துப் போவதே மேல்" என்று நம்மில் பலர் அடிக்கடி எண்ணியிருக்கிறோம். அந்த மேலான காரியத்தை ஸ்ரீ சத்தியமூர்த்தி சாதித்து விட்டார். அருமைத் தாய்நாட்டுக்குச் சுயராஜ்யம் வந்து பார்க்காமலும், செல்வப் புதல்விக்குக் கலியாணம் பண்ணிப் பார்க்காமலும் கண்ணை மூடி விட்டார். பாரதத்தாய் ஒரு சிறந்த புதல்வரை இழந்தான். தமிழ்நாடு, ஒரு அரிய



தலைவரைப் பறி கொடுத்தது. காங்கிரஸ் மகா சபை தன்னுடைய மகத்தான வீரர்களில் ஒருவரை இழந்தது. அதிகார வர்க்கத்துக்கு ஒரு பெரிய கிலி நீங்கிற்று. தீட்டிய ஈட்டியைக் காட்டிலும் கூரிய அவருடைய நாவன்மை மறைந்து விட்டது. சங்கீதத்தைக் காட்டிலும் இனிய அவருடைய பிரசங்கங்களை இனி நாம் கேட்கப் போவதில்லை. போர்க் களத்தில் மடிவோர் வீர சொர்க்கம் புகுவார்கள் என்ற நம்பிக்கை நமது நாட்டில் வெகு காலமாக உண்டு. ஸ்ரீ சத்தியமூர்த்தி போர்க் களத்தில் படுகாயப்பட்டு வெளியேறி மடிந்த வீர புருஷர் என்பதில் ஐயமில்லை. இக உலகில் அவர் அடையாத இன்ப சுகங்களை யெல்லாம் வீர சொர்க்கத்தில் அடைந்து ஆத்ம சாந்தி பெற வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். *

## ஜனநாயகத்தைக் காப்பாற்றினார்

வங்காளப் பிரதம மந்திரி பதவியை விடமாட்டேன் என்று கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த ஸர் பஸ்லுல் ஹக் அந்தப்பதவியை ராஜிநாமா செய்து விட்டாரென்று கேட்க நாம் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவில்லை.

இதைவிட ஆச்சரியம் அவர் ராஜிநாமா செய்ய நேர்ந்த விதந்தான். வங்க சட்ட சபையில் அவர்மீது இரண்டு நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள் கொண்டு வரப்பட்டுத் தோல்வி யடைந்தன. அவரை அசைக்கமுடியா திருப்பதைக் கண்ட கவர்னர் அவரை ஓர் இரவு தமது மாளிகைக்குக் கூப்பிட்டனுப்பித் தேசிய மந்திரி சபை ஏற்படுத்துவதைப் பற்றியும் வேறு பல திட்டங்களைப் பற்றியும் பேசினாராம். ஸர் ஹக் தன்னுடைய சகாக்களைக் கலக்காமல் எந்தத் திட்டத்துக்கும் ஒப்புக் கொள்ள மறுக்கவே கவர்னர் தயாராய் டைப் அடித்து வைத்திருந்த ஒரு ராஜிநாமா கடிதத்தை நீட்டி அதில் கையெழுத்திடும்படி வற்புறுத்தினாராம். ஹாச்சா, டாக்டர் ஷுஸ்னிங் முதலியவர்கள் ஹிட்லரிடம் கையெழுத்துப் போட்ட மாதிரி ஜனாப் ஹக் சாகிப் கையெழுத்துப் போட்டு வந்தார்.

காங்கிரஸ்காரர்கள் மந்திரி வேலை ஒப்புக் கொண்டபோது, "எங்கள் சட்டைப் பைகளில் ராஜினாமாக் கடிதங்கள் தயாராக வைத்திருக்கிறோம்" என்று பெருமை யடித்துக் கொண்டார்கள். காங்கிரஸ்காரர்களல்லாதவர்கள் இனிமேல், "எங்களுக்கு அவ்வளவு கஷ்டங் கூட இல்லை. எங்கள் ராஜினாமாக்களைக் கவர்னர் துரைகளே டைப் அடித்துத் தயாராய் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்!" என்று பெருமை யடித்துக் கொள்ளலா மல்லவா?

*ஸ்ரீ சத்தியமூர்த்தியின் வாழ்க்கையைப் பற்றிய ஒரு கட்டுரை நமது அடுத்த இதழில் வெளியாகும்.

ஏப்ரல் 1உ கொண்டாட்டம் [ஏப்ரல் 1உ யை "சர்வமுட்டாள்தினம்" என்று ஐரோப்பியர் வழங்குவதுண்டு. அந்தத் திவ்விய தினம் உலகில் கொண்டாடப்படும் விதத்தை நமது சித்திரக்காரர் கீழே சித்தரித்துக் காட்டுகிறார்.]

—உம்மன்

















சுதந்திரத்துக்
காகவும்
ஜனநாயகத்
துக்காகவும்
நடக்கும்
புனித யுத்தம்;
எல்லோரும்
சேருங்கள்!


காலனிகள்
பிரிட்டனுடைய
சொந்த
விஷயம்;
அதில் யாரும்
பிரவேசிக்கக்
கூடாது!

ஆந்திர நாடெங்கும் வெற்றிக் கொடி நாட்டி வருகிறது!
பார்க்கப் பரவசம் தரும் காட்சிகள் கொண்டது!!

★

நாகையா, மாலதி, கிருஷ்ணன், மதுரம்
நடிக்கும்

# பாக்யலெக்ஷ்மி

—: ஒப்புயர்வற்ற தெலுங்கு சமூகச் சித்திரம் :—

## தமிழ் நாட்டில் ஆரம்பம்

**2-4-43** முதல்
கோயமுத்தூர் — ராஜா

**3-4-43** முதல்
திருச்சி — வெல்லிங்டன்

**14-4-43** முதல்
திருநெல்வேலி — ராயல்
காரைக்குடி — கிருஷ்ணா

**18-4-43** முதல்
மதுரை — சிந்தாமணி

**ஆந்திர தேசத்தில் 8-4-43 முதல்**
**கீழ்க்கண்ட இடங்களில் 6-வது வாரம்**

பெஜவாடா — கலாமந்திரம்
விசாகப்பட்டணம் — பூர்ண தியேட்டர்
தெனலி — சத்தியநாராயண
எல்லூர் — பாண்டுரங்கா
குண்டூர் — சரஸ்வதி
காக்கினடா — கிரவுன்

**7-4-43 முதல் 4-வது வாரம்**
கர்னூல் — ஜெயலக்ஷ்மி

★

பூர்ண விநியோகம் :

## தி ஸௌத் இந்தியா பிக்சர்ஸ் லிமிடெட்,

காரைக்குடி

---

Hear song hits of BHAGYALAKSHMI on
His Master's Voice & Columbia Records

# குருட்டுத்தனத்தின் எல்லை!

புத்திசாலி ஒருவன் கைக்குட்டையினால் கண்ணை இறுகக் கட்டிக்கொண்டான். பிறகு, தடவித் தடவி வழி ந்தான். வழியில் ஓரிடத்தில் ஒரு ரிய பள்ளம் இருந்தது. பெரு மழை ய்தபோது ஜலம் பிரவாகமாய் ஓடிய ் உண்டான பள்ளம் அது. டுமென்று குருடானவன் அந்தப் ளத்தில் தொபு கடீரென்று விழுந் . விழுந்ததில் காயங்களும் ஏற் ன. "அசடே! கண்ணைக் டிக்கொண்டு ஏன் பள்ளத்தில் ழுந்தாய்?" என்று அந்த வேடிக்கை யப் பார்த்தவர்கள் கேட்டார்கள். தற்கு அந்த பிரகஸ்பதி "என் ரில் என்ன பிசகு? இந்தப் பள்ளம் ற்காக நடு வழியிலே இருக்க ண்டும்? ஆகையினால் பள்ளத்தின் ரில்தானே பிசகு?" என்று கேட்டு டு, அந்தப் பள்ளத்தின் பேரில் ஸ்தாரமாகக் குற்றப் பத்திரிகை க்க ஆரம்பித்தான்!

பிரிட்டிஷ் ஆளும் இனத்தார் இந்தியா சம்பந்தமாக அனுசரிக்கும் கொள்கை மேற்படி புத்திசாலியின் காரியத்துக்குச் சமமாகத்தான் இருக்கிறது! இந்தியாவின் அரசியல் பிரச்னையை அவர்களால் நல்லபடியாகத் தீர்த்துவைக்க முடியவில்லை; சர்வ ஜனங்களும் ஒப்புக்கொள்ளக் கூடிய தேசிய சர்க்காரை அவர்களால் இந்தியாவில் ஏற்படுத்த முடியவில்லை. நாற்பது கோடி இந்திய மக்களையும் உற்சாகமாக யுத்த முயற்சியில் ஈடுபடும்படி செய்ய அவர்களால் முடியவே முடியவில்லை. கேவலம் ஒரு 'ஸ்ரீவாத்ஸவா,' ஒரு ஊஸ்மான் போன்ற தான்றோன்றிகளைத் தவிர வேறு பொது மக்களிடம் நாலு வோட்டுப் பெறக் கூடிய இந்தியர்கள் யாரையும் அவர்கள் இந்திய சர்க்காரில் சேர்த்துக் கொள்ள முடியவில்லை. இந்த மகத்தான தோல்வியை மூடிவைப்பதற்காக அதிகார வர்க்கத்தார் காங்கிரஸின் பேரில் விஸ்தாரமான குற்றப் பத்திரிகையைப் படித்து வருகிறார்கள். காந்தி மகானின் உபவாசத்தின் போது மேற்படி அபத்தப் பஞ்சாங்கத்தை ...ந்தியாவிலே வெளியிட்டார்கள். ...அபத்தப் பஞ்சாங்கத்தை இப் ... இங்கிலாந்திலும் அமெரிக்கா ... வெளியிட்டிருக்கிறார்கள்.

அதிகாரவர்க்கத்தின் படு தோல்வியை மறைப்பதற்காகத் தயாரித்த காங்கிரஸ் குற்றச்சாட்டு புராணம் இந்தியாவில் பலனளிக்கவில்லை; அதை ஒரு ஹாஸ்ய கற்பனைக் கதையாகவே ஜனங்கள் கருதினார்கள். ஆனால் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் எப்படி? பொய்யும் புனை சுருட்டும் எவ்வளவுக் கெவ்வளவு தூரப் பிரயாணம் செய்கின்றனவோ, அவ்வளவுக்கு அதிக பலம் பெறுகின்றன! எனவே, அதிகார வர்க்கத்தின் அபத்தப் பஞ்சாங்கம் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அதிக செலாவணி ஆகலாமல்லவா?

ஆகலாம்; ஆனாலும் பலன் என்னமோ ஒன்றுதான். கண்ணைக் கட்டிக்கொண்டு பள்ளத்தில் விழுந்தவன், பள்ளத்தின் பேரிலேதான் பிசகு என்று பதினாயிரம் பேரை நம்பும்படி செய்யலாம். பலன் என்ன? விழுந்தவனுக்கு ஏற்பட்ட காயங்கள் அதனால் ஆறிப் போகுமா? அல்லது கரையில் தான் ஏறி விட்டதாகுமா?

காங்கிரஸின் பேரில் அதிகாரவர்க்கத்தார் குற்றம் சாட்டுகிறார்களே, என்ன குற்றம் தெரியுமா? யுத்த முயற்சிகளை நாசமாக்க முயன்ற குற்றம்! அதாவது, ஜப்பான் இந்தியாவில் படையெடுத்து வந்தால், ஜப்பானுடன் திறமையாகப் போர் செய் முடியாதபடி யுத்த வசதிகளை அழிக்க முயன்ற குற்றம்!—இன்னும் தெளிவாகச் சொன்னால், இந்தியாவை ஜப்பானியரிடம் ஒப்படைக்க முயன்ற குற்றம்!—சீச்சீ! சொல்கிற மூடர்கள் சொன்னால் கேட்கிறவர்களுக்குமா ம யில்லாமல் போய்விடும்?

யுத்தம் ஆரம்பமாவதற்குச் சில வருஷங்களுக்கு முன்னால் கண்ணு கண்மணியான அமெரி துரை சீனாவில் ஜப்பானியரின் அட்டூழியங்களைத் தா கிப் பேசினார்! "சீனா இருக்கிறதே அது பெரிய பொல்லாத மாடு! ஜ பான்காரன் அடித்தால் அவனைத் திரும்ப முட்ட வருகிறது!" என்றார். அப்படிப்பட்ட புண்ணியவான் இன்று இந்தியா மந்திரி பதவியை அலங்கரித்துக் கொண்டு வீற்றிருக்கிறார்!

நேற்றைய தினம் மகா மகா மக மேதாவியும் பிரகஸ்பதியுமான பிரத

மந்திரி சர்ச்சில் ஒரு பிரசங்கம் செய்தார். யுத்தம் முடிந்த பிறகு உலகத்தை எப்படிப் புனர் நிர்மாணம் செய்வதென்பதைப் பற்றி விஸ்தாரமாகப் பேசினார். கடவுளுக்கு உலகில் வேலையில்லாமல் செய்து விடுவதாகப் பயமுறுத்தினார்! பிரிட்டனும் அமெரிக்காவும் ருஷியாவும் சேர்ந்து மேற்படி புனர் நிர்மாண வேலையின் பாரத்தைத் தாங்கவேண்டும் என்றார். சீனா என்று ஒரு தேசம் இருப்பதையும், அது ஜப்பானுடன் பத்து வருஷமாகப் போர் புரிந்து வருகிறதென்பதையும் அடியோடு மறந்துவிட்டார். இந்த நாசமாய்ப் போகிற மறதியினால் ஏதாவது விபரீதம் வந்து தொலைக்கப் போகிறதே என்று அடுத்த நாள் அமெரிக்காவில் சடன் துரை உரத்த சத்தம் போட்டுப் பேச வேண்டியதாயிற்று. '' சீனாவே! உன்னை நாங்கள் மறந்திடோம்; மறக்க மாட்டோம்; ஒரு நாளும் மறக்கவே மாட்டோம். எங்களை நம்பு; நம்பு; நம்பு!'' என்று அலறினார்.

ஆனால், அமெரியும் சர்ச்சிலும் செய்த தவறுகளை இந்தியக் காங்கிரஸ் ஒரு நாளும் செய்ததில்லை. பத்து வருஷ காலமாகக் காங்கிரஸ் மகா சபை சீனாவை மறந்ததே யில்லை. ஒவ்வொரு வருஷத்துக் காங்கிரஸ் மகா சபையிலும் சீனாவின் சுதந்திரப் போரை ஆதரித்தும் ஜப்பானுடைய ஏகாதிபத்திய வெறியைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேறி யிருக்கின்றன.

அப்பேர்ப்பட்ட காங்கிரஸின் பேரில் ான் '' இந்தியாவை ஜப்பானிடம் ாட்டிக் கொடுத்து விட'' முயன்றதாக 'ரிட்டிஷ் அதிகார வர்க்கம் குற்றம் ாட்டியிருக்கிறது!

சரி; காங்கிரஸ்தான் இப்படித் சத் துரோகம் செய்ய முனைந்து ்டது — அதைச் சிறையில் தள்ள ண்டி நேர்ந்துவிட்டது! மற்றக் ்சிகளின் விஷயம் என்ன? முஸ்லிம் க்கின் ஒத்துழைப்பை இந்திய சர்க் ர் பெற்று விட்டார்களா? ஜனாப் 'னாவைக் கொண்டு தேசிய மந்திரி ப அமைத்திருக்கிறார்களா? அல் அ ஹிந்து மகாசபையின் பூரண த் துழைப்புத்தான் கிடைத்திருக் றதா? ஸாவர்க்கார் வைஸ்ராயின் ர்வாக சபையில் ஏன் இல்லை? ்ட மறுப்பு வாசனையே பிடிக்காதவர் ளும், வாழ் நாள் முழுவதும் சர்க்கா ன் ஒத்துழைத்தவர்களுமான தவாதிகளின் ஆதரவாவது இப்போ

துள்ள இந்திய சர்க்காருக்கு இ கிறதா? ஒரு ஸாப்ரூ, ஒரு சாஸ்தி ஒரு ஸேதால்வத் போன்றவர்களாவ இந்த சர்க்காரைப் பற்றி நல் வார்த்தை சொல்கிறார்களா? டட டலால் முதலிய கோடீசுவர முதலாக கள் இந்த சர்க்காரை ஆதரிக்கிற களா? தொழிலாளர் தலைவர்கள் - அதிலும் ஜோஷி முதலிய மிதவாதி ளாவது — இந்த சர்க்காருடன் ஒ துழைக்கிறார்களா? இந்திய வியாபா சமூகம் இப்போது இந்தியாவில் நட கும் ஆட்சியைப் பற்றி நல்ல வார்த் சொல்கிறதா? நேற்று அகில இந் வர்த்தக சபை கூடியபோது, அ தலைவர் ஜி. எல். மேத்தா என சொன்னார்? ''பிரிட்டிஷாருக்கு அ காரத்தை விட்டுக் கொடுக்க மனமி லாம லிருப்பதுதான் இந்திய அரசியல் பிரச்னை தீராததற்கு முக்கிய காரணம்' என்றுதான். எவ்வளவு அருமையா சர்ட்டிபிகேட்!

இந்திய மக்களின் ஒத்துழைப்பை பெறுவதில் பிரிட்டிஷ் ஆளும் இன தார் படு தோல்வி அடைந்திருக்கிற கள் என்பதில் சந்தேகம் இல் இந்தத் தோல்வியை வெற்றியாக மா றிக் கொள்வதற்குச் சமீபத்தில் ஒரு சந்தர்ப்பம் இந்தியாவை ஆளு வோருக்கு ஏற்பட்டது. மகாத்மா அந்த சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தார். ஆனால் அதையும் அதிகார வர்க்கம் கைவிட்டது.

மகாத்மா உபவாசம் இருந்தார். அவருடைய உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. இந்தியாவின் நாற்பது கோடி ஜனங்களும் ''மகாத்மாவை விடுதலை செய்யுங்கள்!'' என்று கதறினார்கள். ''முடியாது'' என்று அதிகார வர்க்கத்தார் பதில் சொன்னார்கள். அமெரியும் சர்ச்சிலும் ஆமோதித்தார்கள்.

கடவுள் அருளால் மகாத்மா உபவாசத்தைப் பூர்த்தி செய்து உயிர் பிழைத்தார். சிறையின் கதவு பூட்டப்பட்டது.

இதிலே யாருக்கு வெற்றி? யாருக்குத் தோல்வி? இந்தியாவை ஆளுவோர் வெற்றி யடைந்து விட்டார்களா? அப்படியானால் எதில் வெற்றி யடைந்தார்கள்?

அவர்களுடைய பிடிவாதத் வெற்றியடைந்தார்கள்; மௌடீக வெற்றி யடைந்தார்கள்; பி ஷாரும் இந்தியரும் நிரந்தர

பாவத்துடன் வாழமுடியாது என்று நிரூபிப்பதில் வெற்றியடைந்தார்கள்; பள்ளத்திலிருந்து பாதாளத்தில் விழுவதில் வெற்றி யடைந்தார்கள். அவ்வளவுதான்.

மற்றப்படி இந்திய மக்களின் அபிமானத்தைப் பெறுவதில் வெற்றியடைந்து விட்டார்களா? அல்லது யுத்த முயற்சியில் இந்திய மக்களை அதிக உற்சாகத்துடன் ஈடுபடுத்துவதில் வெற்றியடைந்து விட்டார்களா? பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் சிநேகத்தை வளர்ப்பதில் வெற்றியடைந்து விட்டார்களா? இதற்கெல்லாம் அமெரியின் பெயர் பெற்ற "இல்லை" பதிலைத்தான் சொல்ல வேண்டி யிருக்கிறது.

சர்ச்சிலும் அமெரியும் லின்லித்கோவும் மாக்ஸ்வெல்லும் இந்த ஒரு கேள்வியைக் கேட்டுக்கொண்டு பார்க்கட்டும்:- "சென்ற வருஷத்தில் இதே மாதத்தில் ஜப்பான் படையெடுப்பு நேர்ந்திருந்தால் ஜனங்கள் எவ்வளவு உற்சாகத்துடன் அதை எதிர்த்திருப்பார்கள்? இப்போது ஜப்பான் படையெடுப்பு நேர்ந்தால் அதை எதிர்ப்பதில் ஜனங்களுடைய உற்சாகம் அதிகமாயிருக்குமா, குறைவா யிருக்குமா? மகாத்மாவின் உயிருக்கு ஆபத்து நேர்ந்த போதும் அவரை விடுதலை செய்யவில்லை யென்ற எண்ணம் ஜனங்களுடைய உற்சாகத்தை அதிகமாக்குமா, குறைக்குமா?"

இது ஒருபுற மிருக்கட்டும். மகாத்மாவின் உயிருக்கு ஆபத்து வந்திருந்த போதும் அவரை விடுதலை செய்யவில்லையென்ற செய்தியை ஜப்பானியப் பகைவர்கள் எவ்விதம் உபயோகப் படுத்துவார்கள்? தாங்கள் கைப்பற்றியுள்ள நாடுகளில் எந்த முறையில் பிரசாரம் செய்வார்கள்? மகாத்மா விஷயத்தில் பிரிட்டிஷார் காட்டிய பிடிவாதத்தினால் சீனர்களுக்குப் பிரிட்டிஷாரிடம் அபிமானமும் நம்பிக்கையும் அதிகமாகி யிருக்குமா? பர்மாவிலும் மலாயிலும் ஜாவாவிலும் ஸுமத்ராவிலும் கொச்சின் சைனாவிலும் ஸயாமிலும் — அந்தந்த தேச மக்களுக்கு — இங்கிலீஷ்காரர்களிடம் அபரிமிதமான அன்பு பெருகி யிருக்குமா? ஜப்பானியரிடம் பகைமை வளர்ந்திருக்குமா?

மகாத்மாவை அந்த சமயத்தில் விடுதலை செய்ய மறுத்ததினால் இந்திய அதிகார வர்க்கத்தார் பகைவர்களின் துவேஷப் பிரசாரத்திற்கு ....ப ரொம்ப பலங் கொடுத்து விட்டார்களென்பதில் சந்தேகமில்லை. இதை உத்தேசிக்கும்போது அவர்கள் அடைந்தது வெற்றி என்று சொல்லிக் கொள்வதோ, அல்லது எண்ணுவதோ, குருட்டுத்தனத்தின் எல்லையாகும். உண்மையில், அது ஒரு பெரிய ராஜதந்திரத் தோல்வி. இதை பிரிட்டிஷ் அதிகாரிகளும் ஒருவாறு உணர்ந்திருப்பதினால் தான், தங்கள் தோல்வியை மறைத்து மூடுவதற்கு வெள்ளை அறிக்கைகள், கறுப்பு அறிக்கைகள், சிவப்பு அறிக்கைகள் — என்று வெளியிட்டு வருகிறார்கள்! காங்கிரஸின் மேல் இல்லாத பொல்லாத குற்றங்களைச் சுமத்தி வருகிறார்கள்.

ஆளும் வர்க்கத்தின் சார்பாக அமெரிக்காவுக்குப் போய் அபத்தப் பிரசாரம் செய்து திரும்பி வந்த ஸர் ஸபருல்லாகான் தம்முடைய தோல்வியைச் சமீபத்தில் வெளியிட்டிருக்கிறார். "அமெரிக்காவில் காங்கிரஸ் பிரசார ஸ்தாபனம்" ஏதோ இருப்பதாகவும், அதனால்தான் தம்முடைய பேச்சு அங்கே ஏறவில்லை யென்றும் ஒரு பெரிய புளுகு மூட்டையை அவிழ்த்து விட்டிருக்கிறார். அதோடு இந்தியாவிலுள்ள அமெரிக்க நிருபர்கள் எல்லாம் காங்கிரஸுக்குச் சாதகமான செய்திகளையே அனுப்புவதாகவும் முறையிட்டிருக்கிறார். அமெரிக்கர்கள் பிரிட்டிஷாரோடு இரத்த உறவு பூண்டவர்கள். இந்தியர்களிடம் விசேஷ அன்போ, அபிமானமோ அவர்கள் கொள்ளுவதற்கு எவ்வித முகாந்திரமும் இல்லை. அப்படி யிருந்தும் அவர்கள் ஏன் காங்கிரஸுக்குச் சாதகமாகவும் ஆளுவோருக்கு விரோதமாகவும் செய்திகளை அனுப்ப வேண்டும்? நியாயமும் தர்மமும் காங்கிரஸின் சார்பில் இருப்பதனாலேயே தவிர வேறு காரணம் ஒன்றும் இருக்க முடியாது. இதை உணராமல் அமெரிக்க நிருபர்கள் மேல் குற்றம் சொல்வதிலோ, காங்கிரஸின் பேரில் பழி சுமத்துவதிலோ ஒரு பயனும் கிடையாது. இதனாலெல்லாம் ஆளும் வர்க்கத்தின் பிசகையும் தோல்வியையும் மூடி மறைக்கவும் முடியாது. கண்ணைக் கட்டிக்கொண்டு பள்ளத்தில் விழுந்த அசட்டுத்தனமானது. பள்ளத்தையோ அல்லது பார்த்துக் கொண்டிருப்பவர்களையோ எவ்வளவு தான் திட்டினாலும் மாறிவிடாது.

---

இந்து ரூபாய் பரிசு: சென்ற இதழ்க் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஏ. சேதுராமன், அன்னப்பன்பேட்டை, திருக்கடையூர்.



தியாகராஜ நகர்
பஸ்லுல்லா ரோடு
48-ம் நம்பர் வீட்டு
வாசலில் ஒரு பெரிய
கார் வந்து நிற்கிறது.

காரிலிருந்து
இறங்கிய
மிஸ்டர் பிலிப்ஸை
ராஜாஜியின்
புதல்வர் வரவேற்று
அழைத்துச்
செல்கிறார்.



அகத்தின் அழகு
ஒருவாறு இரண்டு
பிரமுகர்களுடைய
முகத்திலும் பிரதி
பலிக்கிறது.

பிலிப்ஸின் கையில்
உள்ள கிளாஸில்
இளநீர்ப்பானம்-
பேச்சும் மிகவும்
சுவாரஸ்யமாகத்தான்
இருக்கவேண்டும்.



விஷயம்
சுவாரஸ்யமானது
மட்டுமல்ல; ரொம்ப
முக்கியமானதாகவும்
இருந்திருக்க வேண்
டும் என்று தோன்று
கிறது.

ாருங்கள்! அமெரிக்கப்
திரிகையை படம்பிடிக்க
ரு அமெரிக்கரே
ன் வந்துவிட்டார்!"
ாட்டோ:
டைரக்டர் எல்லிஸ்
ஆர். டங்கன்.



# அக்கப் போர்

"காசி"

தேசியத் தற்காப்பு கௌன்ஸிலிலிருந்து விலகிக் கொண்ட ஸ்ரீ. மோடி, ஆனே, என். ஆர். சர்க்கார் ஆகிய மூவருக்கும் பதிலாக மிஸ்டர் ஜென்கின்ஸ், மிஸ்டர் பால்டுவின், மிஸ்டர் பின்னே ஆகிய மூவரும் நியமிக்கப் படுவார்களாம்.

'பின்னே' என்று பெயர் வைத்துக் கொண்ளும் ஐரோப்பியரைப்பற்றி நான் இப்பொழுது தான் முதன் முதலாகக் கேள்விப் படுகிறேன்.

* * *

"நாம் நமது தலைவர்களுக்கு நம்மாலான உதவியைச் செய்ய வேண்டும்" என்று ஜனுப் ஜின்னு முஸ்லிம்களுக்குக் கூறுகிறார்.

ஜனுப் ஜின்னுவுக்குத் 'தலைவர்' ஒருவர் பிறந்து விட்டார் என்று எனக்கு இது வரையில் தெரியாது!

* * *

*சர்ச்சிலின் பிரசங்கத்திலிருந்து :—*

" முதலில் நேச தேசங்கள் கூடிய சீக்கிரம் ஏராளமான ஆயுத பலம் உள்ளவராவார்கள்.

அப்புறம் 1943-ம் வருஷத்திலோ 1944-ம் வருஷத்திலோ இரண்டாம் முனை ஏற்படும்.

அப்புறம் ஹிட்லருடனும், முஸ்லோலினியுடனும் சண்டை நடக்கும்.

அப்புறம் அவர்கள் தோற்கடிக்கப் படுவார்கள்.

அப்புறம் ஜெர்மனி நிராயுதபாணி யாக்கப் படும்.

அப்புறம் ஐரோப்பாவில் புதிய ராஜீயத் திட்டம் ஏற்படும்.

அப்புறம் (ஒரு கப் டீ சாப்பிட்டு விட்டு) எல்லா வெள்ளைக்காரர்களுமாகச் சேர்ந்து ஜப்பானைத் தாக்குவார்கள்.

அப்புறம் ஜப்பானைத் தோற்கடிப்பார்கள்!" என்று தெரிய வருகிறது. ஆகவே, இதற்கெல்லாம் அப்புறந்தான் கடைசி கடைசியாக பர்மாவை எதிரிகளிடமிருந்து பிடுங்கிக் கொள்வார்கள் போலிருக்கிறது. அப்படியானல் அது வரையில் ஸிம்லாவில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பர்மா கவர்னர் எப்படிப் பொழுது போக்குவார் என்பதைப் பற்றி எனக்குக் கவலையா யிருக்கிறது.

* * *

'ஸிலோன் டைம்ஸ்' பத்திரிகை காந்திஜியின் உண்ணுவிரதத்தைப் பற்றி அடிக்கடி பரிகாசமாக எழுதி வந்தது. அதைக் கண்டு கோபங் கொண்ட நோரா ராபர்ட்ஸ் என்பவர் அந்தப் பத்திரிகாசிரியரை பலமாக கண்டித்து "மகாத்மா காந்தியின் செருப்பைத் தூக்க லாயக்கற்ற நீர் மகாத்மாவைப் பரிகாசம் செய்ய முயலுவது உம்முடைய இரக்கமற்ற அற்ப சுபாவத்தைத்தான் காண்பிக்கிறது" என்று எழுதியிருந்தாராம். இதில் ஆச்சரியமென்ன வென்றால் அந்த பத்திரிகாசிரியர் அந்தக் கடிதத்தை அப்படியே பிரசுரித்தார். அதுமட்டுமல்ல. இதே மாதிரி தம்மைத் தூஷித்து எழுதப்பட்ட இன்னும் பல கடிதங்களையும், பாட்டுக்களையும் கூடப் பிரசுரித்தாராம்.

* * *

மேற்படி சம்பவத்தைப் படித்தபொழு வில் ரோஜர்ஸ் என்ற அமெரிக்க ஹாஸ் எழுத்தாளரின் ஞாபகம் வந்தது. அவ ஒரு சமயம் 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகை யில் யுத்தக் கடன்களைப் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதைப் பல வாசகர்க ஆக்ஷேபிக்கவே பத்திரிகாசிரியர் "வி ரோஜர்ஸ் எழுதிய கட்டுரையில் உள் அபிப்பிராயங்களுக்கு இந்தப் பத்திரிகையே அல்லது பத்திரிகாசிரியரோ ஜவாப்தாரியல்ல என்று ஒரு குறிப்பு எழுதினர்.

மறு நாள் வில் ரோஜர்ஸ் "இந்தப் பத்திரிகையின் அபிப்பிராயங்களுக்கோ அல்ல பத்திரிகாசிரியரின் அபிப்பிராயங்களுக்கோ நான் கொஞ்சங்கூட ஜவாப்தாரியாக மா



ஏப்ரல் 10உ. சென்னை ரேடியோவில் மு
நேரக் கச்சேரி செய்யும் ஸ்ரீ பி. எஸ். வேதாசல

ன்" என்று ஒரு பதில் கடிதம் எழுதி ர். அதையும் பத்திரிகாசிரியர் தலையங்கத்தின் ழ பிரசுரித்து வைத்தார்!

*　　　*　　　*

"நேச தேசத்தினர் யாராவது அத்லாண்டிக் சாசனத்தின்படி நடக்காவிட்டால் அமெரிக்கர் ளுக்குப் பிரமாதக் கோபம் வந்துவிடும். ப்புறம் அவர்களுக்கு வெறுப்பு ஏற்பட்டு ற்றத் தேசத்தினருடன் கலந்து கொள்ளாமல் னிக் குடித்தனமாய் இருந்து விடுவார்கள்!" ன்று புல்லிட் என்ற மாஜி அமெரிக்கத் ாதர் கூறுகிறார். இது "அந்த ஊரில் ண்ணியதுபோல் பண்ணிவிடுவேன்" என்று யமுறுத்திய பிச்சைக்காரன் கதையையும் தூக்கடித்து விடுகிறதல்லவா?

•　　　•　　　•

"ஜனநாயகக் கொள்கை பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது. ஆகையால் து நமக்குச் சரியானதல்ல!" என்று ஸர் ஸ்மான் சட்ட சபையில் கூறினார்.

பிரிட்டனிலிருந்து இறக்குமதி செய்யப் ட்ட அதிகாரிகளைத் தலையில் தூக்கி வைத் க் கொண்டிருப்பதுதான் சரி என்று கனம் ல் மான் கருதுகிறார் போலும்!

ஹிட்லர் சமீபத்தில் செய்த பிரசங்கத்தில் "நமக்கு இதுவரை இல்லையென்னாது உதவி செய்து வந்த கடவுள் வருங்காலத்திலும் நமக்குப் பலத்தை அளிப்பாராக!" என்று பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார்.

ஆனால் 'கடவுள்' யாரென்று அவருக்கு உண்மையில் தெரிந்திருந்தால் அவ்விதம் பிரார்த்தித்துக் கொண்டிருக்க மாட்டார். அதைப் பற்றி பிரிட்டிஷ் ராஜீய வட்டாரங் களில் ஒரு கதை பரவிக் கொண்டிருக்கிறது:

உலக யுத்தம் முடிந்து விட்டது. சமாதான மேஜையில் ஹிட்லரும் முஸ்லோலினியும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

முஸ்லோலினி:—கடவுள் எனக்கு உலகத் தில் பாதியைக் கொடுப்பதாக வாக்களித்திருக் கிறார். அதைக் கொடுத்து விடும்!

ஹிட்லர்:—அதெல்லாம் இல்லை. கடவுள் எனக்குத்தான் உலக முழுவதையும் வாக்களித் திருக்கிறார்.

அப்பொழுது சர்ச்சில் "அப்படி ஒன்றும் நான் யாருக்கும் வாக்களிக்க வில்லையே" என்றாராம்!

---

ஏப்ரல் 10உ ஆரம்பம்







தியாகராஜ பாகவதர் நடித்த

பக்ஷிராஜா பிலிம்ஸ்

# சிவகவி

டைரக்ஷன் S.M. ஸ்ரீராமுலு நாயுடு

ஸெண்ட்ரல் ஸ்டுடியோவில் தயாரித்தது

ராஜகுமாரி · சாமா

ஜயா · திருபுராம்பா

கிருஷ்ணன்-மதுரம்

DISTRIBUTORS — NARAYANAN & Co. MADRAS

பிராஞ்சுகள்: கோயமுத்தூர், மதுரை, பெங்களூர், கோட்டயம்.



# பூந்தோட்டம்

ஆசிரியர்
ரவீந்திர நாத் டாகுர்
மொழிபெயர்ப்பு
த. நா. குமாரஸ்வாமி



## முதல் அத்தியாயம்

நீரஜா, முதுகுப்புறம் தலையணையை உயரமாக வைத்துக்கொண்டு, நோய்வாய்ப்பட்டுப் படுக்கையில் பாதி சாய்ந்தபடி கிடந்தாள். பட்டுத் துணி ஒன்று அவள் காலை மூடியிருந்தது, மெல்லிய மேகத்தின் கீழ்த் தவழும் இள நிலவைப் போல். சங்கு போன்ற அவள் மேனி பசலை நிறம் கொண்டிருந்தது. வளையல்கள் நெகிழ, கைகள் நீல நரம்பு தெரியும்படி மெலிந்திருந்தன. கண்ணிதழ்களைச் சுற்றிக் கருவளையம்.

அறையில் வெள்ளைச் சலவைக் கற்கள் பதித்த தரை. சுவரில் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் படம். ஒரு புறத்தில் கட்டில், மூக்காலி ஒன்று, பிரம்பு நாற்காலி இரண்டு. மற்றொரு மூலையில் துணிகளைத் தொங்கவிடும் ஸ்டாண்டு. இவற்றைத் தவிர வேறு சாமான்களே இல்லை. பித்தளைக் கலசத்தில் கொத்தாக கிலைம்பங்கிப் பூ. அதன் மிருதுவான மணம் அறையில் சூழ்ந்து கொண்டிருந்தது.

கிழக்குத் திக்கில் இருந்த ஜன்னல் திறந்து கிடந்தது. அதன் மூலமாகப் பார்த்தால் கீழே தோட்டத்திலுள்ள 'ஆர்கிட்' புஷ்ப குஞ்ஜத்தை மூங்கில் வேலி சூழ்ந்திருப்பது தெரியும். மூங்கில் வேலிமீது காக்கணக்கொடி அழகாகப் படர்ந்து விளங்கியது. சமீபத்திலேயே குளத்தண்டை நீர் இறைக்கும் 'பம்ப்' வேலை செய்யும் ஓசை. சலசலவென்று தண்ணீர் மடையின் வாயிலாகப் பூஞ்செடிப் பாத்திகளில் பாய்ந்து கொண்டிருந்தது. நறுமணம் மல்கும் மாந்தோப்பில் இசைக் குயிலின் சலிப்பற்ற கீதம்.

தோட்ட வராந்தாவில் 'டங் டங்' என்று நடுப் பகலை அறிவிக்கும் மணி அடித்தது. படைபடைக்கக் காயும் வெயிலுக்கு அந்தச் சப்தம் ஸம சுருதி எனலாம். மூன்று மணி வரைக்கும் தோட்ட வேலைக்காரர்களுக்கு ஓய்வு நேரம். அந்த மணியோசை செவியில் பாய்ந்ததும் நீரஜாவின் இதயம் வேதனைப்பட்டது; அவள் மனம் வெறுப்புற்றது. வெளிச்சம் கண்கள் கூசும்படியாக இருக்கவே ஜன்னலை மூட ஆயா வந்தாள். "வேண்டாம், திறந்தே இருக்கட்டும்" என்றாள் நீரஜா. மரங்களின் கீழ் நிழலும் ஒளியும் பின்னிக்கொண்டு விளையாடுவதை வெகு நேரம் நோக்கிக் கொண்டிருந்தாள்.

நீரஜாவின் புருஷனான ஆதித்தியன் பெரிய பூக்கடைக்குச் சொந்தக்காரன். நல்ல பெயர் அவனுக்கு அந்த வியாபாரத்தில். விவாகமான மறு நாள் தொடங்கி, அவர்களுக்கு ஒருவர் மேல் ஒருவருக்கு இருந்த ஆழ்ந்த காதலே இந்த அழகிய பூந்தோட்டத்தை இவ்வளவு விருத்திக்குக் கொண்டு வந்தது. பூவின் மேலேயே அவர்களுடைய பிராணன் எல்லாம். புதுப்புது விதமான மலர்ச் செடிகளைப் பண் செய்வதன் மூலம் தம் இன்பத்தை வெளிப்படுத்தினர். தூர தேசம் சென்றவர்கள் விசேஷ தினங்களில் தம் நண்பரிடமிருந்து வரும் கடிதத்தை எதிர்நோக்கி இருப்பதுபோல், இவர்களும் ஒவ்வொரு பருவ காலத்திலும் விதவிதமான புஷ்பங்களின் காணிக்கைக்காகக் காத்திருப்பார்கள்.

அன்று, நீரஜாவின் மனக்கண் முன்பு இந்தப் பழைய நினைவுகளின் சித்திரங்கள் ஒவ்வொன்றாக எழுந்தன. அந்த மாதிரியான இன்ப தினங்கள் சென்று வெகு நாட்கள் கூட ஆகவில்லை; இருந்தும் நீரஜாவுக்கு அவை ஒரு யுகத்துக்கு முன் நடந்த விஷயங்கள்போல் இருந்தன. தோட்டத்தின் பின்புறமாகப் பழையதொரு வேப்பமரம். அதற்கு இணையாக மற்றொரு வேப்பமரமும் முன்னே இருந்தது. அது எப்போது சரிந்து விட்டதோ தெரியாது. அதன் அடிமரம் ஒழுங்காக அறுக்கப்பட்டுச் சிறிய மேஜையாக அமைந்திருந்தது. அந்த இடத்தில்தான் இருவரும் காலையில் உ. அருந்துவது வழக்கம். மரங்களின் இடுக்கு வழியாக, பசுந்தளிர்கள் வடிகட்டிய சூரிய வெளிச்சம் அவர்கள் காலடியில் வந்து படிந்திருக்கும். மைனாக்களும், அணிற் பிள்ளைகளும் அவர்கள்

போதும் ரொட்டித் துண்டுகளுக்காக ஓடி வரும். கொஞ்ச நேரம் உல்லாஸமாக இருந்துவிட்டு இருவருமாகத் தோட்ட வேலையைக் கவனிக்கச் செல்வார்கள். வெயிலுக்காக நீரஜா பூப்போட்ட பட்டுக் குடையைப் பிடித்துக் கொண்டிருப்பாள். ஆதித்தியன் தலையில் ஒரு 'ஸோலார்' தொப்பி. அவன் அரைக் கச்சில், கிளைகளைத் துண்டிக்கும் கத்திரிக்கோல். நண்பர்கள் தன்னைப் பார்க்க வந்தபோதுகூடத் தோட்ட வேலையையும் கவனித்துக் கொண்டே அவர்களுடன் சம்பாஷிப்பான். அவனுடைய நண்பர்கள் புகழ்ச்சியாக ஏதாவது சொல்லாமல் போகமாட்டார்கள். "அந்த 'டாலியா' புஷ்பத்தைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாக இருக்கிறது!" என்பார் சிலர். புஷ்பங்களைப் பற்றியே அறியாதவர் ஒருவர், எல்லாம் தெரிந்தவரைப் போல், "அதெல்லாம் சூர்யகாந்திதானே?" என்று விசாரிக்கும்போது, நீரஜா குறுநகைச் சிரிப்புடன், "இல்லை, க்ருஸாந்தமம்" என்பாள்.

காரியவாதியான ஒரு நிபுணர் ஒரு சமயம், "இவ்வளவு பெரிதாகக் கூடக் குண்டு மல்லிகை பூக்கிறதா என்ன, நீரஜா தேவி? ஏதோ மாயா சக்திதான் இருக்க வேண்டும் உங்கள் கையில். இது மதன சஞ்ஜீதம் போலவே இருக்கிறது" என்றதற்கு, அவருக்கு நல்ல பிரதிபலன் கிடைத்தது. தோட்ட வேலையாள் ஹைலாவின் முகத்தில் கடுகடுப்பு விளையும்படி, அவர் ஐந்து தொட்டிகளில் உள்ள குண்டு மல்லிகைச் செடிகளை அடித்துக் கொண்டு போய்விட்டார்.

சிநேகிதர்களுடன் லதாகுஞ்ஜங்களிலும் பழத் தோட்டங்களிலும், அவர்கள் எத்தனையோ நாள் காலங்கழித்திருக்கின்றனர். விடைபெற்றுச் செல்லும் போது நண்பர்களுக்குக் கூடை கூடையாக, ரோஜாவும், மாக்னோலியாவும், கார்னேஷனும், இன்னும் பப்பாளிப் பழம், எலுமிச்சம் பழம், விளாங்கனி, அவர்களுடைய தோட்டத்திலேயே காய்த்த அபூர்வமான கஸ்தூரிவிளாம், முதலியவை ஏராளமாக வழங்குவார்கள். கடைசியாக உரிய காலத்தில், தேனி யென்ற வகையைச் சேர்ந்த இளநீர்க் காயும் கிடைக்கும். அதைக் குடித்து விட்டு, நண்பர்கள், "பலே பேஷ், கற்கண்டாட்டம் இருக்கிறது" என்பார்கள். அதற்கு, "எங்கள் தோட்டத்தில் காய்த்தது அல்லவா?" என்ற தற்பெருமையான பதில் வரும். "ஓ அதனால்தான்! அப்படிச் சொல்லு!" என்று அவர்களெல்லாம் அக்கி வைத்துப் பேசுவார்கள். வைகறை வேளையில், மரத்தடியில், தார்ஜிலிங் டீயின் சூடான ஆவியுடன் கலந்து பருவகாலங்களின் விதவிதமான 'கதம்பமணத்தில் நினைவுகள் வரும்போது அவன் பெருமூச்செறிந்தான். அவன் மனம், 'ஐயோ ஐயோ' என்று ஏக்கமுற்றது. இன்பம் குலவிய பொன்போன்ற அந்நாட்களை யார் கவர்ந்து சென்றனரோ? அவற்றை மீண்டும் எப்படிப் பெறுவது? அவன் மனம் எந்த விதமான ஆறுதலுக்கும் அடங்கவில்லை. கொடுத்து வைத்தது இவ்வளவுதான் என்று சும்மா இருக்கும் சாதாரணமான பெண் இனத்தைச் சேர்ந்தவளல்ல நீரஜா. இந்த மாதிரி யெல்லாம் நேரிடுவானேன்? இதற்குக் காரணம் யார்? அகிலமெல்லாம் சுற்றி விளையாடும் ஒரு சிறு குழந்தையின் வேலைதான்! பிரம்மாண்டமான ஒரு



பூப்போட்ட பட்டுக் குடையைப் பிடித்துக் கொண்டிருப்பாள்.

பைத்தியக்காரனுடைய விஷயம்! பின் அகண்டமான இந்த உலகத்தைப் படைத்து விட்டு, இப்படித் தாறுமாறாக வைப்பானேன்?

விவாகத்திற்குப் பிறகு பத்து வருஷ காலம் கவலையற்ற சுகத்தில் இவர்கள் மூழ்கி இருந்தார்கள். நீரஜாவின் ஸகிகளுக்கு இதைப் பார்த்து உள்ளூறப் பொறாமைதான். சகஜமாய், உலகத்தவர்களுக்குக் கிடைப்பதற்கு மேல், அதிகமாகவே நீரஜாவுக்குக் கிடைத்து விட்டதே என்ற அசூயை. ஆதித்தியனுடைய நண்பர்களும் அவனைப் பார்த்து, "லக்கி டாக்!" (அதிர்ஷ்டக்கார நாய்) என்பார்கள்.

நீரஜாவின் ஸம்ஸாரப் படகு திடீரென ஒரு நாள் கரை தட்டுவதற்கு முதற் காரணம், அவர்கள் வளர்க்கும் 'டாலி' என்ற நாயினால் ஏற்பட்ட விஷயமே. வீட்டுக்காரி சம்ஸாரத்தில் கால் வைப்பதற்கு முன்பே இந்த 'டாலி' என்ற நாய் யஜமானனுடைய இணைபிரியாத தோழனாயிருந்தது. பிறகு, அதனுடைய ஆசை, தம்பதிகள் இருவர்பாலும் சென்றது. அதில் பெரும்பாகம் நீரஜாவின் பக்கந்தான். வாசலில் வண்டி வரும் சப்தம் கேட்டதுமே நாய்க்கு இருப்புக் கொள்ளாது. அதன் மனம் அலை பாயும். வாலை வேகமாக ஆட்டிக் கொண்டே, வண்டியின் முன்னால் வழி மறைத்துக் கொள்ளும். கூப்பிடாமல் இருக்கும்போதே வண்டியினுள் நுழைய யத்தனிக்கும். யஜமானனுடைய மிரட்டலுக்குப் பயந்து பின்னடையும். பாவம், வாலைக் குழைத்துக்கொண்டு பெருமூச்சு விட்டுத் தன் ஆசை நிறைவேறாமல் வாயிற்படியிலேயே மடக்கிக் கொள்ளும். இவர்கள் வரச் சற்றுத் தாமதமானால் அது காற்றில் மோப்பம் பிடித்துச் சுற்றி அலையும். தெளிவற்ற நாயின் பார்வையில், உள்ளத்தில் வேதனை நிறைந்து ஏதோ வினவும். கடைசியாக, இந்த நாய்க்குத் திடீரென ஏதோ நோய் கண்டது. தன்னை வளர்த்தவர்களை விட்டுப் பிரிய மனம் வராமல், ஒரு நாள் நீரஜாவின் மடியிலேயே அது தன் உயிரை விட்டது.

நீரஜாவின் காதலில் ஒரு பிடிவாதமும் தென்பட்டது. அவளுடைய காதலுக்கு எதிரிடையாக வேலை செய்ய ஈசுவரனாலும் முடியாது என்று நினைத்திருந்தாள். எல்லாம் தனக்கு அனுகூலமாக இருக்கவே இல்வாழ்க்கையில் இதுவரை அவள் யாதொரு அவநம்பிக்கையும் கொள்ளவில்லை; அவள் நம்பிக்கையைக் குலைப்பதற்கு இதுவரை ஒன்றும் நிகழவில்லை. ஆனால் 'டாலி' இறந்த பின்பே அவள் கோட்டை கட்டிய வாழ்வில் சிறு பிளவு தலைகாட்டியது. இது அவலக்ஷணத்தின் முதற் குறியென்று அவளுக்குத் தோன்றியது. பிரபஞ்சத்தை ஆட்டி வைக்கும் கர்த்தா விதி வியவஸ்தை இல்லாதவனா? அவளுடைய பிரஸாதத்திற்கு இனி ஆசைப்படுவது வீணே!

நீரஜாவுக்குக் குழந்தை பிறக்குமென்ற சிறு நம்பிக்கையையும் எல்லோரும் இழந்தனர். கணேச் என்னும் பையனை நீரஜா தன் வளர்ப்புப் பிள்ளையாகப் பாவித்து, அவன் மீது தன் அன்பனைத்தும் செலுத்தினாள். அவள் சீர்திருத்தும் கொடுமையை ஸஹிக்க முடியாதபடி பையன் திணறிக் கொண்டிருந்த சமயம், நீரஜா கர்ப்பவதியானாள். உள்ளுக்குள் தாயின் மனப்பான்மை அவளுக்கு நிரம்பிக் கொண்டே வந்தது. வரும் காலத்துத் தொடுவானில் செக்கிற அருணோத



அடிமரம் ஒழுங்காக அறுக்கப்பட்டு மேஜையாக அமைந்திருந்தது.

யம் தோன்றியது. மாத்தடியில், தன்னை மகிழ்விக்க வரப்போகும் புதிய ஆளுக்காக, அலங்காரமான உடைகளைத் தைப்பதில் தன் மயமாக இருந்தாள்.

கடைசியாகப் பிரஸவ காலம் நெருங்கிற்று. கஷ்டப் பிரஸவமாக இருக்குமென்று மருத்துவச்சிக்குப் பட்டது. ஆதித்தியனுக்கு மனச் சஞ்சலம் இவ்வளவு அவ்வளவு அன்று. டாக்டர் கடிந்து சொன்னவே அவன் ஒதுங்கிப் போய்விட்டான். ஆயுதப் பிரயோகம் செய்து சிசுவைக் கொன்று தாயைக் காப்பாற்றினார்கள். அதற்கப்புறம் நீரஜா படுத்த படுக்கைதான். கோடை காலத்தில், நீர் வற்றி மணல் பரவிய ஆற்றைப்போல் உடலில் ரத்தம் குன்றிப் பலஹீனமாகக் கிடந்தாள் நீரஜா. பிராண சக்தியே அடியோடு போய்விட்டது போலிருந்தது. படுக்கையின் எதிரே திறந்திருந்தது ஜன்னல். நுணாப் பூவின் வாசனையுடன் உள்ளே வெப்பமான காற்றும் வந்து கொண்டிருந்தது. நடுவே எப்போதாவது மூச்சு விடுவதுபோல் நார்த்தம் பூவின் நெடி வீசும். அவள் முன்பு அனுபவித்த வஸந்த ருதுவே நேரில் வந்து, "எப்படி இருக்கிறாய்?" என்று க்ஷேமம் விசாரிப்பது போலிருந்தது.

தோட்டக் காரியத்தைக் கூடமாடக் கவனிக்க ஆதித்தியன், தன் தூர உறவினளான ஸரளாவை அழைத்து வைத்துக் கொண்டிருந்தான். இதுவே எல்லாவற்றையும் விட நீரஜாவை உறுத்தியது. திறந்த ஜன்னல் மூலமாகப் பட்டுக் குடையொன்றைப் பிடித்துக்கொண்டு ஸரளா தோட்டக்காரர்களிடம் வேலை வாங்குவதைப் பார்க்க, நீரஜாவுக்குச் சகிக்காது. நோய் நொடி இராமல் வாழ்ந்த காலங்களில் இதே ஸரளாவை ஒவ்வொரு ருதுவின் கொண்டாட்டத்திலும் கலந்து கொள்வதற்கு அழைக்கத் தவறமாட்டாள் நீரஜா. அப்போதெல்லாம் அதிகாலையிலேயே வேலையில் இறங்கி விடுவாள். பிறகு, குளிர்ந்த ஏரி ஜலத்தில் சற்று நேரம் நீந்தி ஸ்நானம் செய்வது; அது ஆனதும் மரத்தின் நிழலில் வாழை இலை போட்டுக் கொண்டு சித்திரான்னம் புசிப்பது. பக்கத்தில் 'கிராமபோன்' ஒன்று நாட்டுப் பாட்டுக்களையும், விதேசி கீதங்களையும் இசைக்கும். மிருதுவான தயிரும், * ஸந்தேசம், அவல் கேசரியும் தோட்டக்காரர்களுக்குத்தான். புளியந்தோப்பிலிருந்து இவர்களது மழலைச் சம்பாஷணைக் கேட்கும். பொழுது சாயச் சாய, குளிர்ந்த மாலை நேரக் காற்றினால் ஏரி நீர் சிலிர்த்தெழும். மகிழ மரத்தின் உச்சாணிக் கிளையில் பட்சி கூவிக்கொண்டிருக்கும். ஆனந்தம் மேலிட்டு அயர்ச்சி கலந்து அந்தியும் மெல்ல வந்து அணையும்.



பலஹீனமாகக் கிடந்தாள் நீரஜா.

இனிமையை நுகர்ந்த அவள் மனதிற்கு இன்று உலகம் ஏனோ கசந்து விட்டது? இந்த மாதிரி தன் சரீரம் தூர்ப்பலமாகி விடுமென்று அவள் அந்த நாட்களில் எதிர்பார்க்கவே இல்லை. இத்தகைய சப்பிட்ட உணர்ச்சி தன் ஸ்வபாவத்தில் மறைந்திருந்து வெளிப்படுமென்பதை அவள் ஒரு சமயம் அறியாமல் இருந்தாள். ஒவ்வொரு சமயம் தனக்குள்ள இந்தக் குறை அவளுக்குத் தெளிவுறத் தோன்றும்; வெட்கிச் சாவாள். இருந்தும் அவளால் அதைத் தடுக்க முடியவில்லை. இந்த ஹீனமான மனப்பான்மை ஆதித்தியனுக்குத் தெரிந்துவிடப் போகிறதே என்ற பயம். என்றைக்காவது அவன் நேரிடையாகத் தெரிந்துகொள்ளத்தான் போகிறான். தற்சமயம் நீரஜாவின் மனம் வௌவால் கொத்திய பழம் போல் எந்த நல்ல காரியத்திற்கும் பிரயோஜன மற்றுக் கிடந்தது.

பகல் வேளையைக் குறிக்கும் மணி அடித்தது. தோட்டத்தில் வேலை செய்யும் ஆட்கள் களைப்பாறச் சென்றனர். தோட்டத்தில் எவருமே இல்லை. நீரஜாவின் கண்ணுக்கு எங்கோ தொலைவில் பதிந்திருந்தது. நிராசை யென்னும் கானல் நீர் கூடத் தென்படாத ஓர் இடத்திலே, நிழலின்றிக் காயும் வெயிலில், மீண்டும் மீண்டும் சூன்யம் எங்கே நிலைகிறதோ, அங்கே!

(தொடரும்)

*ஒரு தித்திப்புப் பண்டம்.

# தமிழ் வளர்ந்த கதை

பி. ஸ்ரீ.

## 2. அகஸ்தியரும் தொல்காப்பியரும்

சீதா பிராட்டியைத் தேடுவதற்குத் தென் ிசையில் செல்லும் வீரர்களை நோக்கி வழி றும் சுக்கிரீவன், "*மலய பர்வதத்தின் காத்திலே மகா தேஜஸ்வியாய், சூரிய மானாய், ரிஷி சிரேஷ்டராய் விளங்கும் கஸ்தியரைத் தரிசிப்பீர்கள். பிறகு அந்த காத்மாவிடம் விடை பெற்றுக் கொண்டு தலைகள் நிரம்பிய பெரிய தாமிரபர்ணி தியைத் தாண்டுங்கள்" என்று கட்டளையிடு றான். அதன் பின் சமுத்திரத்தை டைந்து காரிய நிச்சயம் செய்யுங்கள் — ன்கிறான். ஆதி காவியமாகிய வால்மீகி ாமாயணத்திலே வரும் அகஸ்திய மாஹாத் மியம் இது. தொல்காப்பியர் பான்ற சிஷ்யர்களுடன் மிழை வளர்த்து அறியாமை இருளைப் போக்கிக் கொண் ருக்கும் தமிழ் முனிவரைச் ரிய சமானர் என்று குறிப் டுவது எவ்வளவு பொருத்த ானது!

### ிநோத எச்சரிக்கை

கம்ப ராமாயணத்திலோ க்கிரீவன், "அந்த மலைக்குப் பாகவேண்டாம்; தமிழ் முனி வரைத் தரிசிக்கவும் வேண் ாம்!" என்று எச்சரிக்கை செய்கிறான். "பொதிய மலையை ிலகிப் போய் விடுங்கள்; ந்தப் பிரதேசத்தை விரை ாய்க் கடந்து தாமிரபர்ணி தியையும் தாண்டி விடுங்கள்; தன் சமுத்திரத்தை அடை ங்கள்" — என்று கட்டளை டுகிறான். அப்படியில்லாவிட் டால், காரிய நிச்சயத்திற்கே வழியில்லை; காரியமே போய்விடும் — என்கிறான். என்ன விநோத எச்சரிக்கை! என்ன விபரீத யோசனை!

வால்மீகியின் சுக்கிரீவனைக் கொஞ்சம் மறந்து கம்ப – சுக்கிரீவனைக் கவனிப்போம்:

தென்தமிழ்நாட்(டு) அகன்பொதியில்
திருமுனிவன் தமிழ்ச்சங்கம்
சேர்கிற் பீரேல்,
என்றும்அவண் உறைவிடமாம்!

*[அகல் : அகன்ற; அவண் : அவ்விடம்.]*

என்கிறான்.



அகஸ்திய மகரிஷி
[ஜாவாவில் கண்ட தென் இந்தியச் சிற்ப வடிவம்.]

பொதிய மலையிலே அகஸ்திய முனிவர், தொல்காப்பியர் முதலான சிஷ்யர்களோடு தமிழ் ஆராய்வதும், தமிழ் கற்பிப்பதுமா யிருக்கிறாராம். தமிழ்ச் செல்வத்தைப் பொது உடைமையாகக் கொண்டு வாழும் அந்த அறிஞர்களுக்கெல்லாம் அகஸ்தியாச்ரமமாகிய அந்தப் பொதிய மலை, பொதியில் (பொது + *இல்) என்ற தன் பெயருக்கு இசைந்தபடி ஒரு பொது இல்லமாக விளங்குகிறதாம். அங்கே போய்ச் சேர்ந்துவிட்டால், அநுமன் முதலான கவிகர்களும் அந்தச் சங்கத்திலே சேர்ந்து தொல்காப்பியர் முதலான தமிழறிஞர்களோடு தமிழ்ச் சுவையை நுகர்ந்து கொண்டு அங்கேயே இருந்து விடுவார்களாம்.

*மலய பர்வதம் : பொதிய மலை.

*இல், இல்லம், வீடு.

அகஸ்தியரையும் தமிழ்ச் சங்கத்தையும் பார்த்து விட்டால், பிறகு இவர்கள் தென் சமுத்திரத்தைப் பார்க்கப் போவதேயில்லை; சீதா தேவியையும் தேடப் போவதில்லை!— என்கிறான். மகாராஜாவாகிய சுக்ரீவன் மீது அனுமன் முதலானவர்களுக்கு உள்ள ராஜ பக்தியையும் மறக்கச் செய்து, சீதாராம கைங்கரியத்தையும் கூட மறக்கச் செய்து விடுமாம் தமிழின் சுவை. இத் தமிழ் முனிவரைக் கம்பர் எவ்வளவு அருமையாகத் திருமுனிவன் என்றே அழைக்கிறார்! தமிழ் என்ற செல்வியுடன் (திருவுடன்) கூடிய முனிவர் பெருமானல்லவா? தொல்காப்பியர் போன்ற சிஷ்ய சம்பத்தும் உள்ளவரல்லவா? கம்பர் கூறும் அகஸ்திய மாஹாத்மியம் இது.

## தொல்காப்பியம்

அகஸ்தியரிடம் முத்தமிழ் கற்ற மாணாக்கர்கள் பலரென்றும், அவர்களில் சிலர் இயல் - தமிழ் இலக்கணம் இயற்றினார்களென்றும், சில மாணாக்கர்கள் இசைத் தமிழ் இலக்கணம் இயற்றினார்களென்றும், வேறு மாணாக்கர்கள் நாடகத் தமிழ் இலக்கணம் இயற்றினார்களென்றும் சொல்லுகிறார்கள். இந்த மாணாக்கர்களில் இயல் - தமிழ் இலக்கணம் இயற்றியவர்கள் பன்னிருவர். இந்தப் பன்னிருவருள் தொல்காப்பியரும் ஒருவர். இவரையே அகஸ்தியருடைய முதல் மாணாக்கர் என்கிறார்கள். இவர் இயற்றிய நூல் ஒன்றுதான் இன்றளவும் சிதையாது நமக்குக் கிடைத்திருக்கிறது.



தொல்காப்பியர்

[ அகஸ்திய முனிவரின் முதல் சிஷ்யர். ]

அகஸ்தியர் இயற்றிய இலக்கணம் அகத்தியம் என்று பெயர் பெற்றதுபோல், தொல்காப்பியர் இயற்றிய இலக்கணமும் தொல்காப்பியம் என்று பெயர் பெற்றது. தமிழுக்கு விளக்காக அகஸ்தியர் இயற்றிய அந்த முதல் நூலிலிருந்து, தீபத்தில் கொளுத்திய தீபம் போலே தோன்றியது தொல்காப்பியம் — என்கிறார்கள்.

உரையாசிரியர்களில் சிலர் அகத்தியம் என்று எடுத்துக் காட்டும் சிற்சில சூத்திரங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால், தொல்காப்பியத்தைத் தீபத்தில் கொளுத்திய தீபம் என்பது போதாது; தீபத்தில் கொளுத்திய தீவட்டி என்று கூடச் சொல்லலாம்.

பொதியமலைச் சங்கத்திலே யிருந்து தமிழ் வளர்த்ததோடு திருப்தி அடையாமல், அகஸ்தியர் பாண்டியர்களின் பழைய நகரமான தென் மதுரையிலே நாட்டிலுள்ள கவிஞர்களும் ரஸிகர்களும் அறிஞர்களும் கூடித் தமிழ் வளர்க்கும்படி ஒரு பெரிய சங்கம் அமைத்து, அந்த முதற் சங்கத்திலே தாமும் ஓர் அங்கத்தினராக அமர்ந்தாராம். ஆனால் அந்தச் சங்கத்திலே அகஸ்தியருடைய முதல் மாணாக்கரான தொல்காப்பியர் இடம் பெற வில்லை. அடுத்த சங்கமாகிய இடைச் சங்கத்திலும் அகஸ்தியர் அங்கத்தினரா யிருந்தாராம். அந்த இடைச் சங்கத்திலேதான் தொல்காப்பியரும் குருவுடன் சரிசமானமாக இடம் பெற்றார் என்கிறார்கள்.

எனவே, தொல்காப்பியம் இயற்றி ஆசிரியர் தொல்காப்பியனார் என்று பேரும் புகழும் பெற்ற பின்பே இவர் சங்கப் புலவரானார் என்று ஊகிக்கலாம். அந்த இடைச் சங்கத்திலே தொல்காப்பியமும் அகத்தியத்துடன் சரிசமானமாய்ப் புகழ் பெற்று விளங்கியதாம்

## மொழி உயர, நாடுயர

இப்படியெல்லாம் தாமும் தமிழ் வளர்
துத் தொல்காப்பியர் மூல
மாகவும் தமிழ் வளர்த்து
புகழ் வளர்த்துக் கொண்ட
அகஸ்தியரை,

என்றும்உள தென்தமிழ்
இயம்பிஇசை கொண்டான்

என்று அந்தத் தமிழ்ப் பெ
யுடன் அப்படியே பிரதிஷ்டை
செய்து விட்டார் கம்ப
தமது ராமாயணம் என்
கோவிலிலே.

இமய மலைச் சிகரத்
திலிருந்து அகஸ்தியரைச் சி
பெருமான் பொதிய மலை
சிகரத்திற்கு அனுப்பி வைத்த
ரென்று புராணம் சொல்லுகி
றதல்லவா? கம்பரோ அகஸ்தி
யரைப் பொதியமலைச் சிகரத்
திலிருந்தும் கவிதா சிகரத்
திலேயே தூக்கி வைத்து
விட்டார்!

மூசாவு சூடுமுத
லோன்உரையின், ‘ மூவா
மாசில்தவ ! ஏ(து) ’என,
வடாதுதிசை மேனுள்
நீசமுற, வானின்நெடு
மாமலயம் நேரா,
ஈசன்நிக ராய்உலகு
சீர்பெற இருந்தான்

[மூசாவு சூடு முதலோன் : சிவபெருமான் ; மூவா : மூப்படையாத ; மாசில்தவ : குற்றமற்ற தவத்தை யுடையவனே ; ஏகு : போ ; வடாது திசை : வடக்குத் திசை ; நீசம்உற : இழிவு அல்லது தாழ்ச்சி அடைய ; நேரா : நேர்ந்து.]

என்ற பாட்டைத்தான் பாருங்கள்.

‘எல்லாமாகிய’ சிவபெருமானும் தேவர்களும் முனிவர்களும் பிறரும் கூடியிருந்த அந்தப் பாரத்தைத் தாங்க முடியாமல் வடதிசை தாழ்ந்து தென் திசை உயர்ந்துவிட்டதென்றுதானே புராணம் சொல்லுகிறது ? அப்போது பூமியைச் சமமாக்கத்தானே சிவபெருமான் அகஸ்தியரைத் தெற்கே அனுப்பி வைத்தார் ? ஆனால் அகஸ்தியர் பொதிய மலைக்கு வந்த பின்பு வடதிசை உண்மையாகத் தாழ்ந்துவிட்ட தென்கிறார் கம்பர்: தென் திசையும் உண்மையாக உயர்ந்து விட்டதாம் !

ஏன்? அகஸ்தியர் என்றால் புலமை; ஆராய்ச்சி: அகஸ்தியர் என்றால் ‘அருஞ்செயல் ; அறிஞர் சங்கம். எனவே, அகஸ்தியரை இழந்த வடநாடு தாழ்வடைய (‘நீசமுற’), அவரை அடைந்த தமிழ்நாடு உயர்ந்துவிட்டதென்று தமிழபிமானமும் நாட்டபிமானமும் தோன்றப் பாடுகிறார் கம்பர்.

தமிழ்மொழியின் ஆதி சரித்திரத்தை ஒருவகையாக ஊகித்துத் தெரிந்து கொள்ளக் கூடிய அந்தக் காலத்திற்கு நாம் மானஸீக யாத்திரையாகப் போய்விட்டால், அகஸ்தியரும் தொல்காப்பியரும் நாடுயர — மொழி உயரப் பாடுபடுவதைக் காண்போம். அந்தப் பழைய காலத்திலேயே வடமொழியும் தமிழ்மொழியும், வடநாட்டு நாகரிகமும் தமிழ் நாகரிகமும் சிறிது சிறிதாய்க் கலந்து ஒரு புதிய ஒளியும் உயர்வும் பெறத் தொடங்கி விட்டன என்பதையும் காண்போம்.

---

*அரை நிமிஷக் கதை*

# எப்படி விஷயம் !

**“ ராஜ் ”**

காலை எட்டு மணி. கண்டிராக்டர் மாணிக்க முதலியார் அப்பொழுதுதான் காபி குடித்துவிட்டு, சாய்வு நாற்காலியில் படுத்தார்.

அப்பொழுது ஒரு மனிதனின் கனைப்பு அவர் கவனத்தைக் கவர்ந்தது. அம்மனிதனைப் பார்த்த முதலியாருக்கு ஒரு திகில் ஏற்பட்டது. காரணம் அந்த ஆள் பார்ப்பதற்குக் கூரிய மீசையும், சிவந்த கண்களும், கறுத்த மேனியும் பயங்கரத் தோற்றமும் உள்ளவனாய்க் காட்சி அளித்ததுதான்.

அந்த ஆள் முதலியாரைப் பார்த்துவிட்டு ஒரு பெரிய கும்பிடு போட்டான். மெதுவாக “ ஐயா, நீங்கள் தர்மவான், நல்ல மனதுடையவர் என்று கேட்டிருக்கிறேன். எனக்கு நீங்கள் ஓர் உதவி செய்ய வேண்டும் ” என்று ஆரம்பித்தான்.

“ உதவியா ? என்ன உதவி ? ” என்று கேட்டார் முதலியார்.

“ ஒன்றுமில்லை ஸார், எனக்கு ஒரு வேலை வேண்டும் ; வேறொன்றுமில்லை.”

“ சரிதானப்பா ! வேலை கேட்கிறாயே, இதற்கு முன் நீ எங்கேயாவது வேலை செய்ததுண்டா ? உன்னுடைய யோக்யதாம்சங்கள் என்ன ? ” என்று கேட்டார் முதலியார்.

இந்தக் கேள்வி முதலியார் வாயிலிருந்து வந்ததுதான் தாமதம், ‘ மடமட ’வென்று வந்த மனிதன், “ ஐயா, நான் எட்டுத் தடவைகள் திருடியிருக்கிறேன் ; நான்கு முறை வழிப் பறிக் கொள்ளை யடித்திருக்கிறேன் ” என்று அடுக்கிக்கொண்டே போனதைக் கேட்டு முதலியார் நடுங்கி விட்டார்.

அவர் பயந்து போய்த் தம் மணி பர்ஸைப் பத்திரமாகப் பிடித்துக் கொண்டார். பிறகு அவரை அறியாமல் அவர் கை டெலிபோன் ரிஸீவரிடம் சென்றது. இதைப் பார்த்த அம்மனிதன், “ முதலியார்வாள், இதெல்லாம் சினிமாவில் நடிகனாக இருந்து செய்த செய்கைகள். இப்பொழுது வேலை யில்லை. உங்களை வேலை கேட்க வந்தேன். அவ்வளவுதான் ” என்றான்.

“ அழகாக இருக்கிறது, நீர் வேலை கேட்க வந்த லட்சணம் ! ” என்று ரிஸீவரை ‘டக்’ என்று வைத்தார் முதலியார்.



# காலக்ஷேபம்

### நல்ல வழி !

**நாயக்கர்** (ஏதோ எழுதிக் கொண்டே) :—அடே, நீ எதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறாய்?

**பையன்** :—கணக்கைத் தீர்த்துத் தொகையைப் பெற்றுக்கொண்ட பின்பு நான் திரும்ப வேண்டும் என்பது என் எஜமானர் உத்தரவு.

**நாயக்கர்** :—உன்னைச் செட்டியார் வேலையை விட்டுத் தள்ளுவதற்கு நல்ல வழி கண்டு பிடித்தார்.

—**கே. வி. சீனு.**

* * *

### எப்படித் தெரியும்

**கோவிந்தன்** :—நம்ம கிருஷ்ணன் ரொம்பக் கஷ்டப்படுறான் போலிருக்கு; மூக்தா நான் அவனிடம் காலணுக்கூட இல்லை;

**நண்பன்** :—ஏன்? உன்னிடம் ஏதாவது கடன் கேட்டானா?

**கோவிந்தன்** :—இல்லை, இல்லை, நான் தான் அவனிடம் கேட்டுப் பார்த்தேன்.

—**கே. ராமமூர்த்தி.**

* * *

### காயமில்லை

**கிருஷ்ணன்** :—குப்பு! என்னுடன் சண்டை போட்ட மனிதன் ஆஸ்பத்திரியில் இருக்கிறான்.

**குப்பு** :—நீ பலமாக அடித்துவிட்டாய் போலிருக்கு.

**கிருஷ்ணன்** :—இல்லேடா, அவன் ஆஸ்பத்திரியில் வேலையில் இருக்கிறான்.

—**பா. அங்கப்பன்.**

* * *

### பதில் சரிதான் !

**தாத்தா** :—அடே, மணி என்னவென்று பார்த்துச் சொல்.

**பையன்** :—மணி பார்க்கத் தெரியாது தாத்தா!

**தாத்தா** :—சின்ன முள் எந்தவிடத்திலிருக்கிறது. பெரிய முள் எந்தவிடத்திலிருக்கிறது?

**பையன்** :—இரண்டும் கடியாரத்திலிருக்கிறது! —**ஆர். வி. நாராயணன்.**

### புத்திசாலி

**தகப்பன்** (பிள்ளையைப் பார்த்து) :—இன்னிக்குப் பரீக்ஷையாமே, பேப்பர் எப்படி?

**பையன்** :—இப்போ வெள்ளை பேப்பர் அகப்படலேன்னு மஞ்ச பேபரிலே அச்சடித்துக் கொடுத்திருக்காப்பா.

—**வி. கிருஷ்ண மூர்த்தி**

* * *

### கல்யாண வீடு

ஒரு கலியாண வீட்டில் இரண்டு மூன்று வேலைக்காரர்கள் பேசிக் கொண்டனர்.

**ஒருவன்** :—இதென்னடாப்பா இந்த வீட்டில் பெரிய இழவாப் போச்சு எவ்வளவு வேலையடாப்பா!

**மற்றொருவன்** :—அடே கலியாண வீட்டில் இழவு என்று சொல்லாதேடா

**அவன்** :—பின்னே என்ன, மனுஷ தாலி அறுந்து விடும் போலேன்னு இருக்கு!

**மற்றொருவன்** :—மறுபடியும் பாரடா அதையே சொல்றே.

**அவன்** :—போடா போ. நான் இவர்களோடு மாரடிப்பது எனக்கல்லவோ தெரியும்? பெரிய வேதாந்தம் பேசுகிறாயே! —**ஜெ. சந்திரசேகரன்**

* * *

### சரியான விடை

**தகப்பனார்** :-ராமு, கணக்கைக் கவனி ஒரு கூடையில் பதினைந்து மாம்பழங்கள் இருக்கின்றன. அதில் பத்தை சோமுவுக்கும் மீதியை உனக்குமாகப் பிரித்து கொடுத்தால் உனக்கு என்ன வரும்?



**ராமு** :—பிரித்துக் கொடுத்தவர்மேல் கோபம் வரும்.

—**கே. சந்தான கிருஷ்ணன்**




★ குற்றால ஸ்நானத்தின் குளிர்ச்சியைத் தரும் ★

★ டி. எஸ். ஆர். & கோ ★

வாஸனை திரவிய வியாபாரிகள், கும்பகோணம்

மதராஸ் ஸிடி ஏஜெண்டுகள் :

புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ்ரோடு, திருவல்லிக்கேணி

ஸ்டாக்கிஸ்டுகள் :

| சுவாமிநாதய்யர் அண்டு சன்ஸ்., புதுக்கோட்டை | சாரதா ஸ்டோர்ஸ் காரைக்குடி | மெஸர்ஸ். சண்டிகா அண்டுகோ., முதல் அக்ரஹாரம், சேலம் |
|---|---|---|

# நல்ல உத்தியோகம்!

"ஸோமாஸ்"

சீதாராமனுக்குச் சங்கீத ஞானம் உண்டு. அவன் நாலு குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் காலத்தைத் தள்ள விரும்பினான். ஆனால் அவனைப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கச் சொல்பவர்கள் யாருமில்லை.

குருமூர்த்தி சீதாராமனின் தம்பி. அவன் கமலா 'கோவாபரேடிவ் ஸ்டோரி'ல் விற்பனைக் குமாஸ்தாவாக இருந்தான். அவனுக்கு ஊரிலுள்ளவர்களெல்லாம் நண்பர்கள் என்று கூறினால் அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. ஏனென்றால் எவ்வளவு பெரிய மனுஷனாயிருந்தாலும், சர்க்கரையோ அரிசியோ நெருப்புப் பெட்டியோ வேண்டுமென்றால் அவனிடம் வந்துதானே ஆக வேண்டும்?

தன் தயவு எவ்வளவு பேருக்கு அவசியமாயிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டதும், குருமூர்த்தி புத்திசாலித்தனமான ஒரு காரியம் செய்தான். "என்ன ஸார்! உங்கள் பெண்ணுக்கு நாலு பாட்டுக் கூட சொல்லிக் கொடுக்காமல் இருந்தால் நாளைக்கு என்ன ஆகிறது? நம்ம சீதாராமனை நாலு மாதம் உங்கள் குழந்தைக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்கச் சொல்லுங்களேன்!" என்று குருமூர்த்தி சாமான் வாங்க வருகிறவர்கள் காதில் நாஸூக்காகப் போட்டு வைத்தான். குருமூர்த்தி சொல்வதை யாரால் தட்ட முடியும்? அப்புறம் எந்த சாமான் கேட்டாலும் 'ஸ்டாக்' இல்லையென்று சொல்லிவிட மாட்டானா? ஆகவே, நாலைந்து இடங்களில் சீதாராமனுக்கு உடனே 'டியூஷன்' கிடைத்தது.

முதன் முதலில் சீதாராமன் டியூஷன் சொல்லிக் கொடுத்தது ஜகதீசய்யர் வீட்டில்தான். சீதாராமன் நல்ல சகுனம் பார்த்துக் கொண்டு சிட்சை சொல்லிக் கொடுக்கப் புறப்பட்டுச் சென்றான். அங்கே அவன் 'ஸ்ரீ இ கணநாத சிந்தூர வர்ண...' என்று பிள்ளையார் கீதத்தின் முதல் அடியை ஆரம்பித்தவுடனேயே ஜகதீசய்யர் அங்கு வந்து "சீதாராமன்!" என்றார்.

"ஏன்?" என்று கேட்டுக்கொண்டே சீதாராமன் ஹார்மோனியம் வாசிப்பதை நிறுத்தினான்.

"உங்க ஸ்டோரில் மிளகாய் என்ன விலை?" என்று கேட்டார்.

சீதாராமன், "தெரியவில்லை. என் தம்பியைக் கேக்கணும், ஸார்!" என்றான்.

"சரி, நாளைய தினம் வரும்பொழுது, மிளகாய், நல்லெண்ணெய், கடுகு எல்லாம் என்ன விலை யென்று விசாரித்துக் கொண்டு வாரும்!" என்று ஜகதீசய்யர் கேட்டுக் கொண்டார்.

சீதாராமன் பாடம் முடிந்ததும் வேறு வீட்டுக்குப் புறப்பட்டான். அவன் மனம் மிகவும் வேதனைப் பட்டது. ஜகதீசய்யர் தன் பாட்டைப் பற்றி ஏதோ சொல்லத்தான் கூப்பிடுகிறார் என்று நினைத்தான். அவர் மளிகை சாமான்களின் விலையை விசாரிக்கவே அவனுக்கு ரொம்ப வருத்தமாய்ப் போய் விட்டது.

சீதாராமன் அதைப் பற்றி வெகு நேரம் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. அடுத்தாற்போல் சர்மா வீட்டுக்குப் பாடம் சொல்லித் தர நுழைந்ததும் அதை அடியோடு மறந்து விட்டான். சர்மா வீட்டில் பாடம் ஆரம்பித்தது முதல் சமையலறையிலிருந்து ஸ்ரீமதி சர்மாவின் நிழல் தென்பட்டுக் கொண்டிருந்தது.

பாடம் முடிந்ததும், ஒருக்களித்திருந்த சமையல்றைக் கதவின் பின் புறத்திலிருந்து, "ஸரஸு! வாத்தியாரைக் கொஞ்சம் இருக்கச் சொல்லு" என்று ரகசிய தோரணையில் ஒரு குரல் கேட்டது. ஸரஸு எழுந்து உள்ளே ஓடினாள்.

காப்பி கொடுப்பதற்காக இருக்கச் சொல்கிறாள் என்று நினைத்து அங்க

வஸ்திரத்தைச் சரியாய்ப் போட்டுக் கொண்டு நாஸுக்காகக் கனைத்து விட்டு எங்கேயோ பார்த்தபடி உட்கார்ந்திருந்தான் சீதாராமன்.

'' நாளைக்கு நீங்க வரபோது நெல்லூர் அரிசி வந்திருக்கான்னு உங்க அண்ணாவிடம் கேட்டுண்டு வந்தால் தேவலே. அத்தோடு, நெருப்புப் பெட்டி ஒரு டஜனாகக் கொடுப்பாளான்னு கேட்டுண்டு வரேளா ?'' என்று ஸரஸுவின் தாயார் கேட்டுக்கொண்டே எதிரில் வந்ததும் அவன் பேய் அடித்தவன்போல் ஆனான். '' பாட்டுச் சொல்லிக் கொடுப்பதற்காக வந்தோமா! அல்லது பலசரக்கு வியாபாரம் பண்ண வந்தோமா!'' என்று சந்தேகம் வந்து விட்டது.

'' நாளைக்கு என் தம்பியைக் கேட்டுச் சொல்லுகிறேன் '' என்று சொல்லி விட்டு, சீதாராமன் கிளம்பி விட்டான்.

வக்கீல் ராமமூர்த்தி ஐயர் வீட்டுக்குப் போகிற வரையில் சீதாராமனின் மனம் ஒரு நிலையில் நில்லாமல் தவித்தது. வக்கீல் வீட்டில் பாடம் முடிந்ததும் ஒரு பாட்டியம்மாள் வெளியே வந்து, '' ஆமாம், உங்கள் ஸ்டோரிலே ரவை எப்படி விக்கறா? பலகாரத்துக்கு ரவை வேணும். உங்க கடையிலே புளி விசை என்ன விலை?'' என்று ஒரோரு சாமானாக விசாரித்துக் கொண்டே போனாள்.

இதைக் கேட்டதும் சீதாராமனுக்கு ஆத்திரம் வந்தாலும் '' நாளைக்கு வரும் பொழுது விசாரித்துக் கொண்டு வருகிறேன் '' என்று சொல்லிவிட்டு மிகவும் வேகமாக வெளியேறிவிட்டான்.

சீதாராமனுக்கு வந்த துக்கத்துக்கு ஒரு குரல் அழலாமா என்றுகூடத் தோன்றியது. அவன் ஐந்து 'ட்யூஷன்'கள் வைத்துக்கொண்டிருந்தான். ஐந்து வீடுகளிலும் அவன் சங்கீதத்தைப் பற்றியோ, அல்லது அவன் போதிக்கும் திறமையைப் பற்றியோ புகழ்ச்சியாக ஒரு வார்த்தை கூட வெளி வரவில்லை! சாமான் விலை விவரங்களைப் பற்றித்தான் அவர்கள் அவனை விசாரித்துக் கொண்டிருந்தனர்.

சங்கீத 'ட்யூஷன்'கள் நிலைத்து நிற்பதற்கும் தான் கெட்டிக்காரப் பாட்டு வாத்தியாரென்று பேர் எடுப்பதற்கும், தனக்குச் சாமான்களின் விலைப் பட்டி அவசியம் தெரிந்திருக்க வேண்டுமென்பதை அறிந்துகொள்ளச் சீதாராமனுக்கு அதிக நாட்கள் பிடிக்கவில்லை. தம்பி குருமூர்த்தியினிடம் சொல்லி விலைப் பட்டியின் நகல் ஒன்று தயார் செய்து எடுத்துக் கொண்டான்.

விலைப் பட்டியை ஒரு அட்டையில் ஒட்டி — ஹோட்டல் மேஜைகளில் 'மெனு' வைத்திருப்பதுபோல் — 'ட்யூஷன்' சொல்லித் தரும்பொழுது தன் எதிரில் வைத்துக் கொண்டான் சீதாராமன்.

இரண்டு வாரங்களுக்குள் சீதாராமனுக்குச்சாமான் விலைப் பட்டி தலைகீழ்ப் பாடமாகி விட்டது. ஒரு விசை மிளகாய் 1-4-0 ரூ. என்றால் 2½ பலம் என்ன விலை என்பதைச் சீதாராமன் கண்களை மூடிக்கொண்டு இப்பொழுது சொல்லுவான். சங்கீதப் பாடம் சொல்லித் தருவதற்கு வீட்டிலேயே இவன் தயார் செய்து கொள்வதுடன் சில சமயம் அவர்கள் கேட்ட சாமான்களையும் வாங்கிக் கொண்டு போக வேண்டியிருந்தது!

சீதாராமனுக்குத் தன் வாழ்க்கை லக்ஷியமே மாறிவிட்ட மாதிரி தோன்றியது. இரண்டு வருஷங்களாக அகோராத்ரம் சாதகம் செய்து கற்றுக் கொண்ட சங்கீதம் இப்படித் தன் விஷயத்தில் மோசம் செய்துவிடும் என்று சீதாராமன் எதிர் பார்க்கவில்லை. மளிகைக்கடை அநுபவம் பெற ஸ்வர வரிசைகளும் தாள பேதங்களும் தெரிந்து கொள்ள வேண்டுமா என்ற கேள்வி மட்டும் சீதாராமனின் மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது.

சீதாராமனுக்குச் சங்



தே 'ட்யூஷ'னில் அதிகமாகச் சம்பாதிக்க முடியா விட்டாலும் தன் சகோதரன் வேலை பார்த்து வந்த ஸ்டோருக்கு நிறைய மெம்பர்கள் சேர்க்க முடிந்தது.

"சாமான் கிடைக்கவில்லை" என்று புகார் செய்பவர்களிட மெல்லாம் "மெம்பராகச் சேர்ந்து விடுங்கள் ஸார்! அப்பொழுது சாமானுக்குப் பஞ்சமே இருக்காது" என்று சொல்லிப் பல பேர்களைச் சேர்த்து விட்டான்.

இதன் பயனாய் முதலில் சாதாரணமாக வியாபாரம் நடந்து கொண்டிருந்த அந்த 'பிராஞ்சி'ல் ஈச்சு விடவும் அவகாசம் கிடைக்காமல் அமோகமாக வியாபாரம் நடக்க ஆரம்பித்தது. இதைக் கண்டு கமலா ஸ்டோர் முதலாளிகள் பெரிதும் ஆச்சரிய மடைந்தனர். கானடைவில் அவர்கள் இன்னொரு 'டெபபோ'வைத் திறந்து வைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது.

புதிய 'டெப்போ' திறந்து வைத்து விட்டால் போதுமா? அதைச் சரியான படி நடத்த நல்ல விற்பனைக் குமாஸ்தா ஒருவர் தேவை யல்லவா? அதற்கு சீதாராமனைத் தவிர வேறு ஒருவரும் இல்லை என்பது அவனது சங்கீத நண்பர்களது அபிப்பிராயம் மாத்திரமல்ல; ஸ்டோர் டைரக்டர்களின் அபிப்பிராயமும் கூட.

சங்கீத வாத்தியாராகக் காலத்தைத் தள்ள விரும்பிய சீதாராமன் முதலில் அந்தக் குமாஸ்தா வேலையை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டான். ஆனால் ஸ்டோர் டைரக்டர்கள் ஏழு பேரும் ஒரு டெபுடேஷனாக வந்து அவனைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளவே அவன் மனமிரங்கிச் சம்மதித்தான்!

சீதாராமன் புதிய 'டெப்போ'வில் வேலை ஏற்றுக் கொண்டு விட்டான். முன்பு, வீடு வீடாகச் சென்று சங்கீதம் சொல்லிக் கொடுபபதுடன் நில்லாமல் சாமான்களின் விலைப் பட்டியையுமல்லவா பாடம் ஒப்பிக்க வேண்டியிருந்தது? இப்பொழுது அவனுக்கு அந்தக் கஷ்டம் இல்லை. சங்கீதம் சொல்லிக் கொடுக்காமல் சாமான்களை விற்பனை செய்து கொண்டிருப்பதிலேயே அவனுக்குச் சம்பளம் கிடைத்துக் கொண்டிருக்கிறது!

ஆனால் அதற்காக சீதாராமன் சங்கீத ஞானத்தை விணுக்கவில்லை. ஒரோரு சமயம் ஆலாபனம் செய்து கொண்டும் ஒரோரு சமயம் ஏதாவது துக்கடா பாட்டுப் பாடிக் கொண்டுமேதான் சாமான்களை விற்கிறான்!

# சீர் திருத்தம்

"தூமிலன்"

"கோமளம்!" என்று ராமநாதன் கூப்பிட்டான்.

"ஊம்!" என்று சமையல் அறையிலிருந்து பதில் வந்தது.

"ஊம் என்றால் என்ன அர்த்தம்?" என்று கேட்டான்.

சிறிது நேரம் வரை இதற்குப் பதிலில்லை. "கோமளம்!" என்று மறுபடியும் ஆத்திரத்துடன் கூப்பிட்டான்.

"வந்து விட்டேன்" என்று அதே ஆத்திரத்தொனியில் பதில் கிடைத்தது.

"எத்தனை நாழி?"

"அதான் வந்து கொண்டே இருக்கிறேனே. அதற்குள் மூச்சு விடாமல் கூப்பிட்டால்?"

"பேச்செல்லாம் பலமா யிருக்கே."

"சரி, சரி, எதற்காகக் கூப்பிட்டேன்? சொல்லுங்கோ."

"நீ சொன்னதை இன்னொரு தரம் சொல்லு. 'சரி — சரி! சொல்லுங்கோவா?'"

"நான் என்ன தப்பாகச் சொல்லி விட்டேன்?"

"சொல்வதற்கு இன்னும் என்ன பாக்கி வைத்திருக்கிறாய்? 'சரி, சரி.' அந்த இரண்டாவது 'சரி'க்கு என்ன அர்த்தம்? சொ ... ல்லுங்கோ! அந்த 'சொ'விலே எவ்வளவு அழுத்தம்? சொல்லச் சொல்லி உத்தரவு போடுகிறாயாக்கும்?"

"நான் சாதாரணமாய்த்தான் சொன்னேன். அதை நீங்கள் தப்பாய் எடுத்துக் கொண்டால் என்ன பண்ணுகிறது? இன்ன எழுத்துக்கு இவ்வளவு சப்தம் போட்டுப் பேசணுமென்று கணக்குப் போட்டுக் கொணடிருப்பாளா! இனிமேல் இதற்கெல்லாம் கூட ஸ்வரம் பாடிப் பழக்கிக்கொள்ள வேண்டியதுதான்."

"பிரசங்கம் நடக்கட்டும்" என்று ராமநாதன் உறுமினான்.

"எனக்கு எத்தனையோ வேலை இருக்கு. நான் ஒண்ணும் பேசிக் கொண்டிருக்கக் காத்துக் கொண்டிருக்கவில்லை."

"என்னோடு பேசப் பிடிக்கவில்லையென்று சொல்லி விடேன்!"

"அதெல்லாம் கிடக்கட்டும். என்னை எதற்காகக் கூப்பிட்டீர்கள்?"

"அதெல்லாம் கிடக்கட்டுமா? பேஷ்! நான் ஒண்ணு சொன்னால் உனக்கு அவ்வளவு அலட்சியம்? நீ போய் உன் காரியத்தைப் பார். எனக்குத் தாகம் எடுத்து, அது அடங்கி அரை மணி நேரம் ஆகிவிட்டது."

"இதை முன்னாடியே சொல்லக் கூடாதா?" என்று கூறி விட்டு கோமளம் உள்ளே போய் ஒரு டம்ளரில் ஜலம் கொண்டு வந்து அவனிடம் நீட்டினாள். ராமநாதன் அதை வாங்கிக் கொள்ளாமலும் அவள் பக்கம் திரும்பிப் பாராமலும் முகத்தைக் கடுகடுவென்று வைத்துக்கொண்டு தன் கையிலிருந்த புத்தகத்தைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருக்கவே அவள் டம்ளரை மேஜை மீது வைத்தாள்.

"உன் கோபத்தை டம்ளரின் மீது காண்பிக்க வேண்டாம்" என்று ராமநாதன் சீறினான்.

"எனக்கு ஒன்றும் கோபமில்லை. நீங்கதான் ..."

"கோப மில்லாமல்தான் டம்ளரை அப்படி டக்கென்று வைத்தாயாக்கும்?"

"அட ராமச்சந்திரா! இன்று யார் முகத்தில் விழித்தேனோ தெரியவில்லையே."

"அட ராமநாதா என்றுதான் சொல்லேன். இன்று என் முகத்தில்தான் விழித்தாய்? இனிமேல் அப்படிப்பட்ட பெரிய பாபத்தைப் பண்ணி விடாதே."

"ஏன் இப்படி ஒன்றுமில்லாததற்கெல்லாம் கோபம் வருகிறது? இதற்கெல்லாம் கூடப் பள்ளிக்கூடத்தில் பரீக்ஷை வைக்கிறாளா?"

"என்ன சொன்னே! எனக்கா கோபம் வருகிறது? நான் எவ்வளவோ பொறுமையாய் இருக்கிறேன்" என்று இரைந்து கொண்டே டம்ளரை வேகமாகக் கீழே தட்டி விட்டான்.

அப்பொழுது மெத்தையிலிருந்து சிவசாமியும் ஜானகி அம்மாளும் கீழே

இறங்கி வந்து கொண்டிருந்தனர். "பார்த்தீர்களா? தினம் நீங்கள் இல்லாத சமயத்திலே இது மாதிரிதான் ஏதாவது ஒன்றுமில்லாததற்கெல்லாம் பெரிய ரகளை நடக்கிறது. சண்டை முற்றி விடப் போகிறது. நான் போகிறேன்" என்று சொல்லிவிட்டு ஜானகி அம்மாள் கீழே இறங்கி வந்தாள். பிறகு ஒன்றுந் தெரியாதவள் போல் "என்னமோ சப்தம் கேட்டதே, என்ன?" என்று கோமளத்தை விசாரித்தாள்.



"எனக்கா கோபம் வருகிறது?"

"ஒன்றுமில்லை. டம்ளர் தவறிக் கீழே விழுந்து விட்டது" என்று சொல்லிக் கொண்டே கோமளம் அதை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றாள். ராமநாதன் மிகவும் மும்முரமாகப் படிப்பவன் போலிருந்தான்.

அன்று மாலை சிவசாமியும் அவர் மனைவியும் இந்த சம்பவத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"கல்யாணம் ஆகி முழுசாக ஒரு வருஷங் கூட ஆகவில்லை. அதற்குள் இத்தனை சண்டையா!" என்று ஜானகி ஆச்சரியப்பட்டாள்.

"இந்த அழகிலே காதல் கல்யாணம் வேறே இலட்சணம்!"

"அதைச் சொல்லுங்கோ."

"எனக்குத்தான் எங்க அப்பா அம்மா என்னைக் கேட்காமல் கல்யாணம் பண்ணி வைத்துவிட்டா. உன்னை நான் மாலை யிடுகிறபோதுதான் பார்த்தது."

"பார்க்காமல் பண்ணிக்கொண்டதில் என்ன குறைந்து போச்சு?"

"இந்தா, சண்டைக்கு வராதே. நான் பேச்சுக்குச் சொன்னேன். நம்ப ராமுவுக்கு எத்தனையோ பேர் நான் நீ என்று போட்டி போட்டுக் கொண்டு பெண் கொடுக்க வந்தா. ராமுவோ 'கோமளத்தைத் தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன். இல்லாவிட்டால் சந்நியாசியாய்ப் போய் விடுவேன்' என்று குறியாய்க் குறித்தான். அந்தப் பெண்ணும் தன்னை வேறு யாருக்காவது கொடுப்பதாயிருந்தால் தற்கொலை செய்து கொண்டு விடுவேன் என்று பட முறுத்திக் கொண்டிருந்தாளாம். அப்படிப்பட்டவர்கள் இப்படி எலியும் பூனையுமாய் இருப்பார்களென்று யார் எதிர்பார்த்தா?"

"நான் தலையிட்டால் நாஸுக்காயிராது என்று இதுவரை பேசாதிருந்தேன். இனிமேல் சும்மா இருக்கக் கூடாது. அவர்களைச் சீர்திருத்தியாக வேணும். அவன் கோபித்துக் கொண்டால் கூடத் தணிந்து போக வேண்டுமென்று கோமளத்துக்குப் புத்திமதி சொல்றேன். அவனிடமும் சொல்லிப் பார்க்கிறேன்" என்றாள் ஜானகி.

"ஜானகி! அதனால் எல்லாம் பிரயோசனம் ஏற்படாது. இரண்டு நாள் பேசாதிருப்பா. மறுபடியும் வழக்கம்போல் சண்டை ஆரம்பித்து விடும்" என்றார் சிவசாமி.

"என்ன இருந்தாலும் ராமு கொஞ்சம் முன் கோபக்காரன்தான். கோபத்துக்கு உங்களைக் கொண்டிருக்கிறான்."

"என்னை வம்புக் கிழுக்காதே!" என்று சொல்லிவிட்டு "இவர்கள் சண்டையை நிறுத்த எனக்கு ஒரு வழி தோன்றுகிறது" என்றார் சிவசாமி.

"என்ன?"

"இவர்களுக்குச் சண்டையில் வெறுப்பு ஏற்படும்படி செய்துவிட வேண்டும். அதற்காக நீயும் நானும்..."

"இந்த வீட்டை விட்டு எங்கேயாவது போயிருக்க வேண்டுமா?"

"நாம் ஓரிடத்துக்கும் போக வேண்டியதில்லை. நாம் இரண்டு பேரும் அவ

களைப் போலவே சண்டை போட்டுக் கொள்ள வேண்டும்" என்றார்.

இதைக் கேட்ட ஜானகி அம்மாள் ஆச்சரியத்துடன் "அவர்களுக்காக நாம் சண்டை போட்டுக் கொள்ளவாவது? பைத்தியக்காரத்தனமான்னா இருக்கு. அதெல்லாம் நடக்காத காரியம்" என்றாள்.

"சண்டை யென்றால் நிஜச் சண்டையா? விளையாட்டுச் சண்டை போட்டுக் கொள்ளலாம்."

"விளையாட்டுக்குக்கூட உங்களோடு சண்டைபோட என் மனசு கேட்காது."

"ஒரு நாலைந்து நாளைக்குச் சண்டை போடுவோமே. தமாஷாய்ப் பொழுது போகும்" என்று சிவசாமி சொல்லவே ஜானகி சம்மதித்தாள்.

பெரியவர்க ளிருவரும் முதல் முதல் எப்படிச் சண்டையை ஆரம்பிப்பதென்று தீவிரமாய் யோசனை செய்து கொண்டிருந்தனர். ஜானகிக்கு எத்தனையோ வழிகள் தோன்றின. இருந்தாலும் 'அவர்' முதலில் ஆரம்பிக்கட்டும், அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்றிருந்தாள். சிவசாமி எவ்வளவோ யோசனை செய்து பார்த்தும் அவருக்கு முதல் நாள் ஒன்றும் தோன்றவில்லை. இரண்டாவது நாள் எல்லோரும் சாப்பிட்டுக் கொண்டிருந்த போதுதான் அவருக்குச் சண்டை போட சந்தர்ப்பம் ஏற்பட்டது. சாப்பிட்டுக் கொண்டிருந்தவர் திடீரென்று சாதத்தை உற்றுக் கவனிக்கத் தொடங்கினார்.

"என்ன அப்படிப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று ஜானகி கேட்டாள்.

சிவசாமி மிகவும் சிரமப்பட்டு சாதத்திலிருந்து ஒரு சிறிய கல்லைப் பொறுக்கி எடுத்தார். "இப்படிக் கல்லையும் கட்டியையும் போட்டுச் சமைத்தால் உடம்பு என்னத்திற்கு ஆகும்! நேற்றெல்லாம் வயிற்றை வலித்ததற்குக் காரணம் இப்போது தெரிகிறது" என்றார்.

"இன்றைக்குக் கல் அகப்பட்டால் நேற்றைக்கு வயிற்றை வலிப்பானேன்? இத்தனூண்டு கல்லுக்குப் பிரமாதப் படுத்துகிறீர்களே" என்றாள் ஜானகி.

"அப்படியானால் இனிமேல் பெரிய பாறாங் கல்லாகப் பார்த்துப் போடு!"

"போடுகிறேன், ஒரு வண்டியிலே நிறைய கல் கொண்டு வந்து போடச் சொல்லுங்கோ."

"என்ன வாய் அதிகமாகிறது?"

"எனக்கு எப்போதும் இருக்கிற வாய்தான் இருக்கு" என்று ஜானகி நிதானமாகச் சொன்னாள்.

"எனக்கு இப்போ வர கோபத்திலே..........." என்று சிவசாமி சாப்பாட்டை ஒதுக்கிவிட்டு எழுந்திருக்கப் போனார். ஆனால் அவர் அரை வயிற்றுடன் எழுந்திருக்க விரும்பவில்லை. தவிர தாம் விளையாட்டுக்காகச் சண்டை போடுவதும் ஞாபகம் வரவே கோபத்தை மூட்டை கட்டி வைத்து விட்டு நன்றாகச் சாப்பிட்டு விட்டு எழுந்தார்.

ராமநாதனும் கோமளமும் பெரியவர்கள் சச்சர விட்டுக் கொள்வதைப் பார்த்து ஆச்சரியப் பட்டனர். ராமநாதனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏனெனில் அவனுக்கு விவரம் தெரிந்ததிலிருந்து இது வரையில் அவன் தன் பெற்றோர்கள் சண்டைபோட்டுக் கொண்டு பார்த்ததே இல்லை.


"உங்காத்து ... மாடு ... இப்படித்தான் கத்துமாக்கும்?"

சிவசாமியும் ஜானகியும் தங்கள் ஏற்பாட்டின்படி தினம் குறைந்தது இரண்டு தடவையாவது சண்டைபோட்டுக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது ஜானகி பேசுவதையும் நடந்து கொள்வதையும் பார்க்கும்போது "நம்ம அம்மாவா இப்படிச் செய்கிறாள்?" என்று ராமநாதனுக்குத் தோன்றும்.

பெரியவர்களுக்குள் சச்சரவு ஏற்பட்டது முதல் அவன் தன் மனைவியிடம் ஒரு மாறுதலைக் கவனித்து வந்தான். கோமளம் இப்பொழுதெல்லாம் அவன் கோபமாய்ப் பேசும்போது பதிலுக்குப் பதில் சொல்லிச் சண்டையை வளர்த்திக் கொண்டிருப்பதில்லை. எதற்கும் சிரித்துக் கொண்டே பதில் சொல்ல ஆரம்பித்தாள். இதன் பயனாய் அவன்கூட அவளுடன் அநாவசியமாய்ச் சச்சரவிடுவதைத் தன்னை யறியாமலே குறைத்துக் கொண்டு வந்தான்.

ஒரு நாள் அவன் வெளியில் போவதற்காகச் சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டு கிளம்பினான். சட்டையில் பொத்தானில்லை. தேடிப் பார்த்தான். அகப்படவில்லை. அவனையும் மீறி பழைய கோபம் வந்துவிட்டது. "இதெல்லாம் பார்த்து வைக்காமல் என்ன பண்ணுறியோ தெரியவில்லை!" என்று கோமளத்தைக் கோபித்துக் கொண்டு சட்டையை வீசி எறிந்தான். அவன் செய்ததைக் கவனித்துக் கொண்டிருந்த சிவசாமி, பிள்ளைக்குப் புத்தி புகட்ட இதுதான் நல்ல சந்தர்ப்பமென்று எண்ணி "ஜானகி!" என்று உரக்கக் கூப்பிட்டார்.

"ஊம்!" என்று பதில் வந்தது.

"என்ன ஊம்! எருமை மாடு மாதிரி."

"உங்காத்து எருமை மாடு இப்படித்தான் கத்துமாக்கும்?"

"சரி, வாயை மூடு! என் சட்டைப் பையிலே ஏன் கர்ச்சீப் எடுத்து வைக்கவில்லை? எத்தனை நாள் உனக்குச் சொல்கிறது?"

"எனக்கு வேறு வேலை கிடையாதாக்கும்."

"முன்னப் பின்னே பழக்க மிருந்தான்னா தெரியப் போகிறது? உங்காத்திலே வயல் வெளிக்குப் போகிறதற்கு யார் கைக்குட்டையெடுத்துக்கொண்டு போயிருக்கப் போறா?" என்றார்.

அவ்வளவுதான், வந்தது ஆபத்து. "நாங்கள் எல்லாம் நாகரிகமற்றவாள், பட்டிக்காட்டுப் பேர் வழிகள். எங்காத்திலே ஒருத்தரும் கைக்குட்டையே பார்த்ததில்லை. அப்படிப்பட்ட குடும்பத்திலே வந்து தெரியாத்தனமாய் என்னைக் கல்யாணம் செய்துகொண்டு விட்டீர்கள். என்னால் இனிமேல் உங்களுக்குக் கஷ்டம் வேண்டியதில்லை" என்

சொல்லி 'ஓ'வென்று அழ ஆரம்பித்து விட்டாள்.

ராமநாதனும் கோமளமும் அவளை எவ்வளவோ சமாதானப் படுத்திப் பார்த்தார்கள். ஆனால் அழுகை அதிகமாயிற்று.

சிவசாமிக்கோ பரம சந்தோஷம். தன் மனைவி இவ்வளவு நன்றாக நாடகம் நடிப்பதைக் கண்டு அவர் ஆச்சர்யப் பட்டுக் கொண்டிருக்கையில் ஜானகி ஒரு பெட்டியை எடுத்துக்கொண்டு வந்தாள்.

"எதற்காகப் பெட்டி?" என்று கேட்டார் சிவசாமி.

"எதற்காகவா? பட்டிக்காட்டு மனுஷான் சகவாசம் உங்களுக்கு வேண்டாம். நான் எங்க ஊருக்குப் போகிறேன். கைக் குட்டையைப் பற்றித் தெரிந்து கொண்டு அப்புறம் வருகிறேன்" என்றாள்.

சிவசாமி இதைக் கேட்டுத் திகைத்துப் போனார். அப்பொழுது பக்கத்தில் ராமுவும் கோமளமும் இல்லாதிருக்கவே "ஜானகி! நாம் விளையாட்டுக் கோசரம் சண்டை போட்டுக்கறோம்" என்று இரகசியமாய்ச் சொன்னார்.

ஆனால் ஜானகி அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவளாய்ச் சில புடவை துணி மணிகளைக் கருட்டிப் பெட்டியில் வைக்க ஆரம்பித்தாள்.

"மறந்து போய் விட்டாயா? நாம் விளையாட்டுக்கோசரம் சண்டை போட்டுக் கொள்க்றோம். நாம் விளையாட்டுக்கோசரம் சண்டை போட்டுக் கொள்க்றோம்" என்று இரண்டு மூன்று தடவை சொன்னார்.

அவர் இப்படிச் சொன்னதும் அவள் கோபம் இன்னும் அதிகமாயிற்று. "விளையாட்டாவது, விளையாவது! எங்காத்தை அவமானப் படுத்த வேண்டும் என்கிறதற்காகவே நீங்கள் இந்த ஏற்பாடு பண்ணியிருக்கேள்" என்றாள்.

அப்பொழுது அங்கே வந்த கோமளம் "இல்லே மாமி! நிஜமாகவே விளையாட்டுச் சண்டைதான்" என்று காதில் ரகசியமாய்க் கூறினாள்.

கோமளமே அப்படிச் சொன்னதைக் கேட்ட போதுதான் ஜானகிக்குக் கோபம் எல்லாம் பறந்து போய்ப் பழைய ஞாபகம் வந்தது.

"உனக்கு எப்படி விளையாட்டு என்று தெரியும்?" என்று கேட்டாள்.

"ஒரு நாள் அவர் கோபத்திலே டம்ளரை ஜலத்தோடு வீசி எறிந்தாரே, அன்றைக்கு மாமாவும் நீங்களும் பேசிக் கொண்டிருந்ததை நான் அகஸ்மாத்தாகக் கேட்டேன். நீங்கள் விளையாட்டுக்காகச் சண்டை போட்டுக் கொள்ளப் போவது தெரிந்தது. அதை நான் உங்கள் பிள்ளையிடம் கூடச் சொல்லவில்லை. நான் மட்டும் சரியாக நடந்து வந்தேன். அதிலிருந்து எங்களுக்குள் அநேகமாகச் சண்டை நின்று போய்விட்டது என்று சந்தோஷப் பட்டுக் கொண்டிருக்கிறேன். நீங்கள் வந்து ......"

"இல்லை, கோமளம்! நீயே சொல்லு. பிறந்த வீட்டைப் பற்றிப் பரிகாசம் பண்ணினால் கோபம் வருமா வராதா?" என்று கேட்டாள்.

"கட்டாயம் வரும்" என்றாள் கோமளம்.

# 66 வருஷ அனுபவம்

## லாரென்ஸ் அண்டு மேயோ (இந்தியா) லிமிடெட் 1876ல் ஸ்தாபிதம்

## உங்களுக்குத் தெரியுமோ ?

சென்ற ஐம்பது வருஷங்களுக்கு மேலாக உள்ள முதிர்ந்த அனுபவத்தாலும் நவீன சாஸ்திர ஆராய்ச்சியாலும் எங்களுடைய ஸ்தாபனம் உங்களுக்கு இந்தியாவில் மட்டுமல்லாமல் தூர, கிழக்கு இந்தியப் பிரதேசங்களிலும் தொண்டாற்றி வருகின்றது. இந்தியாவிலுள்ள எங்கள் எல்லா பிராஞ்சு ஸ்தாபனங்களிலும் தேர்ச்சி பெற்ற அனுபவமுள்ள ஆங்கில, இந்திய கண் வைத்தியர்கள் உங்களது கண்களைப் பரிசோதித்துக் கண் பார்வையைப் பாதுகாத்துக் கொள்ள யோசனைகள் சொல்ல எப்போதும் தயாராயிருக்கிறார்கள்.

இந்தியாவிலும் கீழ்ப் பிரதேசங்களிலும் 60 வருஷ சாஸ்திர ஆராய்ச்சியும் அனுபவமும் கொண்டதால்தான் இந்தியாவிலேயே எங்கள் ஸ்தாபனம் முதன்மை ஸ்தானம் பெற்று விளங்குகிறது. உங்களது உயிரினும் அரிய பொக்கிஷமாகிய கண்களைப் பரிசோதித்துத் தக்க பாதுகாப்பளிக்கும் பணிவிடை செய்ய நாங்கள் இருக்கிறோம்.

தேர்ச்சி வாய்ந்த கண் வைத்தியர்களும், சாஸ்திரிய விஞ்ஞானக் கருவிகள் தயாரிப்பவர்களும்

## LAWRENCE & MAYO (INDIA) LTD.

ரிஜிஸ்டர்டு ஆபீஸ் : 11, கவர்ன்மெண்ட் ப்ளேஸ் ஈஸ்டு, கல்கத்தா.

பிராஞ்சுகள் :

பெங்களூர், பம்பாய், டெல்லி, லாகூர்,
லக்னோ, மதராஸ், முஸ்ஸௌரி, நாகபுரி, சிம்லா.

LMK.1

## காரைக்கால் அம்மையார் — சாரங்கபாணி

ஆசாமி நிற்கிற நிலை, பார்க்கிற பார்வை — எல்லாவற்றையும் கவனிக்கும்போது இது நெருக்கடியான கட்டமாகத்தான் இருக்க வேண்டுமென்று ஊகிக்கிறோம். **காரைக்கால் அம்மையார்** படத்தில் இந்த மாதிரி ஒரு நெருக்கடியான கட்டம் வர வேண்டுமென்றே சதி செய்ததுபோல், முன்னொரு காலத்தில் காரைக்காலில் வாழ்ந்து வந்த புனிதவதி என்ற அம்மையார் ஒரு வகையான காரியம் செய்கிறார். அதாவது புருஷனுக்காக இருந்த மாம்பழம் ஒன்றை ஒரு சிவனடியாருக்கு எடுத்துப் போட்டுவிடுகிறார். புருஷன் அதை அறிந்து கோபாக்கிராந்தனாகி, மனைவியின் நடத்தையைப் பற்றியே சந்தேகிக்க ஆரம்பிக்கிறான். அதுவும் சாரங்கபாணி நடித்துப் பெயர் வாங்க வேண்டுமென்றே அந்தப் புருஷ சிகாமணி அசட்டுப் பிசட்டென்று காரியங்கள் செய்திருப்பதைப் படிக்கும்போது, முன்னோர்களுக்கு ரொம்பவும் தீர்க்க திருஷ்டி இருந்திருக்க வேண்டுமென்றே தெரிகிறது!

## அரிச்சந்திரா — லக்ஷ்மி தேவி

'' அப்பா, மகனே பாம்பு! அலறிக் கடித்ததையோ!'' என்ற பிரசித்தி பெற்ற பாட்டைத் தாங்கி நிற்கும் அரிச்சந்திரன் கதையைக் கேட்டுக்கொண்டிருந்தால்தான் நாம் பாரத புண்ணிய பூமியில் இருக்கிறோம் என்று அர்த்தம். அரிச்சந்திரனும் சந்திரமதியும் நாடக மேடையில் அடிக்கடி தோன்றிக்கொண்டிருப்பது, பாரத நாடு இன்னமும் புண்ணிய பூமியாகத்தான் இருக்கிறதென்பதற்கு அறிகுறியாகும். இந்த மர்மத்தைத் தெரிந்து கொண்டு, வெள்ளித் திரைக்கும் நல்ல காலம் வர வேண்டுமென்பதற்காக, அடிக்கடி அரிச்சந்திராவை சினிமாப் படமாக எடுக்க விரும்புகிறார்கள். இப்போது பிரகதியில் தயாராகும் 'அரிச்சந்திரா' என்ற கன்னடப் படத்தில் லக்ஷ்மி தேவி சந்திரமதியாகத் தோன்றி நன்றாக நடித்துப் பாடுகிறாராம்.



# படித்துப் பார்



## நினைவு மஞ்சரி இரண்டாம் பாகம்

[ ஆசிரியர் : மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. ஸ்வாமிநாதய்யர் அவர்கள்; பிரசுரம்: ஸ்ரீ எஸ். கல்யாணசுந்தரமய்யர், 'தியாகராஜ விலாசம்', திருவட்டீசுவரன் பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை; பக்கம் 224; விலை : ரூ. 1—4—0. ]

தமிழ் மொழி உள்ள அளவும், தமிழ் நாடு உள்ள அளவும், மகாமகோபாத்தியாய சாமிநாதய்யர் அவர்களின் பெயரும் நிலைத்திருக்கும். அத்தகைய மகத்தான தமிழ்ப் பணியை ஐயரவர்கள் செய்திருக்கிறார்கள். தமது வாழ்க்கை அநுபவங்களை ஆதாரமாகக் கொண்டு பல அரிய கட்டுரைகள் ஐயரவர்கள் பல்வேறு பத்திரிகைகளில் எழுதியதுண்டு. அவற்றுள் சில "கண்டதும் கேட்டதும்" "புதியதும் பழையதும்" முதலிய பெயர்களுடன் புத்தகமாக வெளியாகியிருக்கின்றன. அவற்றைப் படித்தவர்களுக்கு "நினைவு மஞ்சரி - இரண்டாம் பாகத்தை" நாம் சிபார்சு செய்ய வேண்டியதில்லை. படியாதவர்கள் இந்நூலை வாங்கிப் படித்தால் ஐயரவர்களின் அநுபவக் களஞ்சியமான மற்ற கட்டுரைத் திரட்டுகளையும் வாங்கிப் படிக்க அவசியம் ஆவல்கொள்வார்கள்.

## சிதம்பர கீதம்

[ஆசிரியர் : யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்; பிரசுரம்: அன்பு நிலையம், இராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா; விலை : சாதாரண பதிப்பு ரூ. 1—8—0; உயர்ந்த பதிப்பு ரூ. 2—8—0.]

தமிழிசை இயக்கத்தின் சிறந்த நற்கனிகளில் ஒன்று இந்த நூல். ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின் இனிய தமிழ்க் கீர்த்தனங்கள் 115 இதில் அடங்கியிருக்கின்றன. புத்தகம் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத அழகான பதிப்பு; கீர்த்தனங்கள் கேட்கக் கேட்கத் தெவிட்டாத இனிய அமைப்பு. "ஐங்கரா கருதி" "தூக்கிய திருவடி" முதலிய கீர்த்தனங்களை ஏற்கெனவே கேட்டு மகிழ்ந்திருக்கிறோம். மற்றக் கீர்த்தனங்களையும் அழகான கர்நாடக மெட்டுக்களில் கேட்க விரும்புகிறோம். செட்டிநாட்டரசர் டாக்டர் ஸர் அண்ணாமலை செட்டியாரின் தமிழிசை ஆர்வமே இந்நூல் வெளியானதற்கு முதற் காரணம் என்று தெரிகிறது. சிதம்பரம் கோவில் காட்சிப் படங்கள் சில இந்தப் புத்தகத்தின் அழகுக்கு அழகு செய்கின்றன.

## World Religions

ஆசிரியர் : ஸசிவோத்தம ஸர் ஸி. பி ராமஸ்வாமி ஐயர் கே. ஸி. எஸ். ஐ., கே. ஸி. ஐ. இ., எல்எல்.டி.; பிரசுரம்: கவர்ன்மெண்ட் பிரஸ், திருவனந்தபுரம்; விலை: அணா எட்டு.]

உலகத்திலுள்ள பெரிய மதங்கள் எல்லாவற்றின் கோட்பாடுகளையும் ஆராய்ந்து, சாராம்சத்தில் எல்லா மதங்களும் ஒன்றே என்பதை இந்தச் சிறு ஆங்கில நூலில் ஆசிரியர் ஸர் ஸி. பி. ஸ்தாபித்திருக்கிறார். ஸர் ஸி. பி. யைப்போல் இவ்வளவு கௌரவப் பட்டங்கள் பெறாத பல நூலாசிரியர்கள் ஏற்கெனவே மேற்படி உண்மையை ஸ்தாபிக்க முயன்றிருக்கிறார்கள். உதாரணமாக, ஸ்ரீ வி. கிருஷ்ணன்* என்பவர் கூடத் தமது பகவத்கீதை என்ற நூலில் "யோயோ யாயா" என்று ஆரம்பிக்கும் சுலோகத்தில் மேற்படி உண்மையை ஸ்தாபிக்க முயன்றிருக்கிறார். இப்படி எத்தனையோ பேர் சொல்லியும் இதுவரையில் உலகத்தில் சர்வ மத சமரச மனப்பான்மை ஏற்பட்டபாடில்லை. இவான் ஸர் ஸி. பி. யினால் எழுதப்பட்டுத் திருவனந்தபுரம் கவர்ன்மெண்ட் பிரஸ்ஸில் அழகாக அச்சிடப்பட்ட இந்த எட்டணா புத்தகத்தை வாங்கிப் படித்தாவது மனித வர்க்கம் மதங்களைப் பற்றிய உண்மையை அறிந்து கடைத்தேறுவதாக!

* ஸ்ரீ வஸுதேவரின் புதல்வர் கிருஷ்ணன்

---

## கவிச் சித்திர விளக்கம்

கொஞ்சமும் அமைதி யில்லாமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள்; துடித்துக் கொண்டிருந்தாள் — உள்ளும் புறமும் நெருப்பிலே புரள்வதுபோலே! ஆனால் இப்போது இவ்வளவு சாந்தி, குளிர்ச்சி; இந்த அதிசயமான மாறுதல்! காதலர் உலகில்தான் இப்படிப்பட்ட அதிசயங்களைப் பார்க்கலாம்.

உறங்காத கண்களும் கொஞ்சம் உறங்க, ஒரு கனவு. அந்தக் கனவிலே யாரோ தன்னை — ஏன்? தன் இதயத்தையே (அகம்) — தொட்டுவிட்டதாக ஓர் உணர்ச்சி. அந்த உணர்ச்சியின், அந்த ஸ்பரிசத்தின், விளைவுகள். 'யார்?' என்று எண்ணிப் பார்த்ததும், அந்த உருவம். இவற்றையெல்லாம் சொப்பன லோகத்தின் அந்தச் சாயையோடு அப்படியே நமக்கும் தோற்றுவிக்கும் இந்தப் பாட்டு பாரதியாரின் அதிசயமான பாடல்களில் ஒன்று.



எண்ணும் பொழுதி லெல்லாம் — அவன்கை
இட்ட இடந் தனிலே

தண்ணென் றிருந்த தடி — புதிதோர்
சாந்தி பிறந்ததடி

எண்ணி எண்ணிப் பார்த்தேன் — அவன்தான்
யாரெனச் சிந்தை செய்தேன்

கண்ணன் திருவுருவம் — அங்ஙனே
கண்ணின் முன் நின்றதடி!

கவிச் சித்திரம்—12

—பாரதியார்.




# சித்திரக்காரன்

ஓர் ஊரில் ஒரு அரசன் இருந்தான். அவன் ரொம்பப் பொல்லாதவன். யாரையாவது இம்சை செய்து கொண்டேயிருப்பதில் அவனுக்கு மிகவும் திருப்தி. ஆகவே, அவனை எல்லோரும் வெறுத்தனர்.

ஒரு நாள் அந்த அரசனைப் பார்க்க ஒரு சித்திரக்காரன் வந்தான். "மஹாராஜாவே! நான் ஒரு சித்திரக்காரன். என்ன படம் எழுதச் சொன்னாலும் அதை உடனே எழுதி விடுவேன்" என்றான்.

அரசன் மிகவும் கர்வத்துடன், "அப்படியா? நாளையதினம் நமது சபைக்கு வா" என்றான்.

மறுநாள் காலையில் அரண்மனையில் பெரிய சபை கூடியிருந்தது. அப்பொழுது சித்திரக்காரன் உள்ளே வந்தான். அவனை ராஜா "உட்காரு" என்றுகூடச் சொல்லவில்லை. இறுமாப்புடன் அவனைப் பார்த்து, "ஏ, சித்திரக்காரா! நல்ல ரோஜா மலர் ஒன்று எழுது பார்ப்போம்" என்றான்.

சித்திரக்காரன் சில நிமிஷங்களுக்குள் ஒரு ரோஜா மலரை எழுதி விட்டான். என்ன ஆச்சரியம்! நிஜ ரோஜாப் புஷ்பம் கூடத் தோற்று விடும்! அவ்வளவு அழகாயிருந்தது! எல்லோரும் அதைப் பார்த்து ஆச்சரியமடைந்தனர். அரசன் அந்த மலர்ப் படத்தைத் தன் அறையில் மாட்டி விட்டான்.

சாயங்காலம் அந்தப் படத்தைப் பார்த்தபோது அரசனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. நிஜ ரோஜா புஷ்பம் போலவே, அந்தப் படத்திலிருந்த ரோஜா மலரின் இதழ்களும் வெயில் தாங்காமல் வாடி உதிர்ந்திருந்தன.

அரசன் அதைப் பார்த்து வியப்ப அடைந்தான். இருந்தாலும் அதை அடக்கிக் கொண்டு சித்திரக்காரனை அழைத்து "உன் வேலை சுத்த மோசம் என் மாமாவின் படம் ஒன்று இருக்கிறது! அது வெகு நாட்களுக்கு முன் எழுதினதாகையால் மங்கலாகி விட டது. ஒரு நாழிகையில் அந்த படத்தை எழுதி முடித்து என்னிடம் கொடுத்து விட வேண்டும். இந்தத் தடவையாவது நீ சரியாக எழுதா விட்டால் உன்னைக் கடுமையாகத் தண்டிப்பேன்" என்று எச்சரித்தான்.



சித்திரக்காரனுக்கு அ வயிற்றைக் கலக்கிற்று. "தெரியாத்தனமாய் இ னிடம் அகப்பட்டுக் கொ டோமே" என்று நினை தான். மிகவும் கவலைப்பட்டுக் கொண்டே, ஒரே நாழிகையில் அரசனுடைய மாமாவின் படத்தை எழுதி முடித்துக் கொடுத்தான். கொஞ்ச



கூட வித்யாச மில்லாமல் தன் மாமாவைப் போலவே இருந்த படத்தைப் பார்த்து அரசனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

இரண்டு நாட்கள் சென்றதும் அந்த மாமாவின் படத்துக்கு, தாடி, மீசை எல்லாம் வளர ஆரம்பித்து விட்டது. அரசன் இதைப் பார்த்து ஆச்சரிய மடைந்தான். அவனுக்கு அவமானமாயு மிருந்தது.

சபையில் எல்லோரும் கூடி யிருக்கும் சமயத்தில் அரசன் சித்திரக்காரனை அவமானப்படுத்த நினைத்தான். அரண்மனையில் பல பேருக்கு முன்னால் சித்திரக்காரனை ஓயாமல் ஒழியாமல் படம் ஏதேதோ எழுதும்படி சொல்லிக்கொண்டே யிருந்தான். சித்திரக்காரன் கோபம் தாங்க மாட்டாதவனாய் அரசனுக்கு எப்படிப் புத்தி கற்பிக்கலாம் என்று யோசித்தான்.

அப்பொழுது அரசன் "ஒரு கம்பீரமான ஆண் சிங்கம் எழுத வேண்டும்" என்று சொன்னான்.

சித்திரக்காரனும் மிகவும் சந்தோஷத்துடன் சம்மதித்துப் பத்து நிமிஷங்களுக்குள் ஒரு சிங்கப் படம் எழுதி விட்டான்.

படம் எழுதி முடிந்ததும் சிங்கம் நிஜமாகவே கர்ஜனை செய்வது கேட்டது! சபையில் இருந்த எல்லோரும் பயத்தினால் நடுங்கி விட்டனர்.

அதைப் பார்த்து அரசனும் நடுங்கி விட்டான். அந்த சிங்கம் பயங்கரமாக ஒரு தடவை கர்ஜனை செய்துவிட்டு அரசன் மீது பாய ஆரம்பித்ததும், "ஐயோ! படத்தை அழித்துவிடு. நான் உன்னை அவமானப்படுத்தியது தவறு! தவறு!" என்று அரசன் சித்திரக்காரனைப் பார்த்துக் கெஞ்சினான். சித்திரக்காரன் படத்தை அழித்ததும் சிங்கமும் மறைந்தது. அரசன் சித்திரக்காரனுக்கு ஏராளமான வெகுமதி அளித்து அவனை அனுப்பி வைத்தான். அன்று முதல், அரசன் துர்க்குணத்தை விட்டொழித்து நல்ல அரசனானான்.



தொடர் கதை

# உடைந்த வளையல்

கு. ரா.

## மூன்றும் அத்தியாயம்

மறு நாள் பொழுது விடிந்தது.

பட்டு, மணி இவர்கள் வீட்டில் அவர்கள் தகப்பனார் நாராயணய்யர் தான் எல்லாருக்கும் முதலில் எழுந்திருப்பார். எழுந்து பல் தேய்த்து, கும்மட்டியை மூட்டி, காப்பிக்கு வெந்நீர் போட்டுக் கொண்டிருக்கையில் அவர் மனைவி எழுந்திருக்கிற வழக்கம்.

அன்று படுக்கையை விட்டு எழுந்தது முதல் அவருக்குக் கோப மூட்டும் காரியங்களே வீட்டில் நடந்தன. பல் தேய்ப்பதற்காகப் பல்பொடி டப்பியைத் திறந்தபோது டப்பி காலியாக இருந்தது.

"பல்பொடி எல்லாம் ஆய்விட்டதா?" என்று கூச்சல் போட்டார்.

"எனக்குத் தெரியாதே. இருந்தால் டப்பியிலேதானே இருக்கணும்" என்றாள் அவர் மனைவி ராஜம்மாள்.

"டப்பியில் ஒன்னுமே இல்லையே!"

"அப்படி என்றால் பொடி எல்லாம் ஆய் விட்டதுபோலே இருக்கிறது."

"அது எனக்குத் தெரியும். அதற்குள்ளாகவா ஆய்விட்டது என்று கேட்கிறேன். வாங்கி ஒரு வாரத்துக்குள்ளா?"

"எனக்கென்ன தெரியும்? நான் உங்கள் பல்பொடியைத் தொடுகிறதே இல்லை. ஒருவேளை குழந்தைகள் எடுத்துத் தேய்த்துக் கொண்டதுகளோ என்னவோ."

"அவர்களைத்தான் இந்தப் பல்பொடியைத் தொட வேண்டாமென்று சொன்வேனே. அவாளுக்குத்தான் வேறே பொடி இருக்கே. பல் வலிக்கென்று ஸ்பெஷலாய் வாங்கிக் கொண்டு வந்து வைத்தால், அதை எல்லாரும் தேய்த்துக் கொண்டால் அது எத்தனை நாளைக்கு வரும்? துளிக்கூடப் பொடி இல்லையே, இப்போ என்ன பண்ணுகிறது? சாம்பலைப் போட்டுத் தேய்த்தால் உடனே இரத்தம் வந்து விடுகிறது. "நல்ல குழந்தைகள்! சொன்னால் சொன்னபடி கேட்கிறதில்லை" என்று நாராயணய்யர் இரைந்தார்.

பட்டுவும் மணியும் தூக்கம் கலைந்து எழுந்திருக்கிற சமயம், அப்பாவின் இரைச்சலைக் கேட்டதும் விழித்துக் கொண்டார்கள். ஆனால் அவர் கண்ணெதிரில் வந்தால் என்ன பண்ணுவாரோ என்று பயந்து தூங்குவது போல் பாசாங்கு செய்து கொண்டு கிடந்தார்கள்.

நாராயணய்யர் காப்பி சாப்பிட்டு விட்டு வந்து உட்கார்ந்தார். கூடத்தில் கட்டியிருந்த துணி உலர்த்தும் கொடி அறுந்து துணிகளுடன் கீழே கிடப்பது அவர் கண்ணில் பட்டது.

"இந்தக் கொடியை யார் அறுத்தது?" என்று கேட்டார்.

"ராத்திரி கயிற்றை எலி கடித்து விட்டதுபோல் இருக்கிறது" என்றாள் அவர் மனைவி.

"அடே மணி! சங்கரய்ய ராத்துக்குப் போய் ஏணி வாங்கிக் கொண்டுவா, கொடியைக் கட்டலாம்" என்று மணியை அனுப்பினார்.

மணி ஏணியைத் தூக்கிக் கொண்டு வந்து நிறுத்தினான். நாராயணய்யர் ஏணி மேல் நின்று கொடி கட்டத் தொடங்கின பொழுது பரியாரி பழனிவேலு வந்தான். "அப்பா, பழனி வந்திருக்கான்" என்று மணி அறிவித்தான். "இருக்கச் சொல்லுடா வருகிறேன்" என்றார். ஆனால் கால் மணி ஆகியும் கொடி கட்டி முடியவில்லை. கழுத்து வலி எடுத்தது தான் மிச்சம். பழனி திண்ணையில் உட்கார்ந்து கத்தியைத் தீட்டிக் கொண்டே "சாமி சாமி!" என்று அவசரப் படுத்தினான்.

"டேய் மணி!"

"ஏன் அப்பா?"

"அவனை இப்படிப் போய்ச் சுத்தி விட்டு, கால் மணி கழித்து வரச் சொல்லுடா. பறக்கிறானே கிடந்து! நமக்கு மேலே அவனுக்கு அவசரமாய் இருக்கிறது. எந்த ஆபீஸுக்குப் போகப் போகிறானோ தெரியவில்லை" என்றார்.

பழனி போய்விட்டான். போனால் இலேசில் திரும்பி வருகிறானா? அவனுக்குச் சௌகரியப் பட்டபோது தான் அவன் வந்து நிற்பான். நமக்குச் சௌகரியப் பட்டபோது எவ்வளவு தேடினாலும் அகப்பட மாட்டான். நாராயணய்யருக்கு ஆபீஸுக்கு நேரமாயிற்று. க்ஷவரம் செய்து கொள்ள வேண்டும், அப்புறம் குளித்துச் சாப்பிட்டாக வேண்டும். பழனியையோ காணவில்லை. மணியைத் தெருவின் இந்தக் கோடிக்கும் அந்தக் கோடிக்கும் அனுப்பி அவன் வருகிறானா என்று பார்க்கும்படி செய்தார். மணி உதட்டைப் பிதுக்கிக் கொண்டு வந்து சேர்ந்து சேர்ந்தான்.

"குழந்தைகள் ஒன்றுக்குத் துப்பில்லை! பழனியைத் தேடிண்டு வாடா என்று அனுப்பினால் வெறுங்கையோடு வந்து நிற்கிறது! நமக்கென்று பிறந்திருக்கிறதுகளே! ஒவ்வொரு குழந்தைகள் ஊரையே விற்றுவிடுகிறேன் என்கிறதுகள்!" என்று நாராயணய்யர் கடு கடுத்தார்.

சமையலறையிலிருந்து 'சொய்' என்று தாளித்துக் கொட்டும் சப்தம் வந்தது. அத்துடன் அவர் மனைவியின் குரலும் கேட்டது.

"உங்களுக்கு ஒரு நாளைப் போலே அம்பட்டன் தயவென்ன? எல்லாரையும் போல் நீங்களும் ஒரு 'ஸெட்டு' வாங்கி வச்சுக்கிறதுதானே? பழனிக்கு மாசம் இரண்டு ரூபாய் அழறதும் மிச்சப்படும்."

"ஆமாம்; அது ஒன்றுதான் பாக்கி. வீட்டிலே க்ஷவரக் கடையும் ஆரம்பித்து விடு என்கிறாய்போல் இருக்கிறது."

"ஏன், அதற்கென்னவாம்? இந்தக் காலத்தில் எல்லாரும்தான் அவாளே க்ஷவரம் பண்ணிக்கிறா. ஆபீஸ்காரர் ஒவ்வொருத்தர் வீட்டிலேயும் போய்ப் பாருங்கோ."

நாராயணய்யர் கோபத்துடன், "ஆமாம், எல்லாருக்கும் கண் அவிஞ்சால் நமக்கும் அவியணுமா என்ன?



ஷேவிங் ஸெட் வாங்கி வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் எல்லாரையும் போல் நான் பாஷனாய் இருக்கிறேனா? தலையில் உச்சிக்குடுமிதானே வைத்துக் கொண்டிருக்கிறேன்?" என்றார்.

"உச்சிக் குடுமிதான் வச்சுக்கணும்னு யாராவது உங்களை நிர்ப்பந்தம் பண்ணுகிறாளா என்ன? அழகாய்க் கட்டுக் குடுமி வைத்துக் கொள்வதை யார் வேண்டாமென்றார்கள்? இல்லா விட்டால் உங்கள் தம்பியைப்போல் நாலுக் காய் கிராப் வாரி விட்டுக்கொள்கிறது தானே?"

"ஆஹா! எல்லாம் வச்சுக்க வேண்டியதுதானே! வரவர பால்யம்தானே திரும்புகிறது. கிராப்பும் வச்சுப்பேன் ஹாட்டும் போட்டுப்பேன்—அடே மணி பழனி வரானா பாரடா."

மணி வந்து, "இல்லை அப்பா" என்றான்.

நாராயணய்யர், "சரி, மேஜை மேலிருந்து கடிதாசும் பேனாவும் எடு



துண்டு வா. ஆபீஸுக்கு லீவ் லெட்டர் எழுதித் தரேன், ஜெகன்னாதாச்சாரியிடம் கொண்டுபோய்க் கொடு" என்றார்.

சமையல் அறை வாசப்படியிலிருந்து ராஜம்மாள் எட்டிப் பார்த்தாள்.

"லீவ் போடுகிறீர்களா என்ன?"

"ஆமாம். இன்றைக்கு க்ஷவரம் பண்ணிக் கொள்ளாமல் ஆபீஸுக்குப் போக முடியாது. நேத்திக்கே துரை எதிரில் போய் நின்றபோது அவன் முழிக்க முழிக்கப் பார்த்தான். 'என்னடா காட்டுமிராண்டியாய் இருக்கிறானே' என்று நினைத்துக் கொண்டான் போலிருக்கிறது. அவனுக் கென்ன? தினம் பொழுது விடிந்தால் ஊத்தைப் பல்லைக் கூடத் தேய்க்காமல் கண்ணாடி எதிரில் உட்கார்ந்து முகத்தை வழித்துக்கொண்டு விடுகிறான். நாம இங்கே அம்பட்டனைத் தேடி நாசமாய்ப் போகிறதை அவன் என்ன கண்டான்?" என்றார்.

"லீவு போடுகிறதாயிருந்தால் என்னமாவது காரணம் சொல்லிக்கோங்கோ. ஜுரம்னு மட்டும் எழுதாதீங்கோ. நன்னாயிருக்கிறபோது வெறுமனே எதுக்காக ஜுரம்னு சொல்லணும்?" என்றாள் ராஜம்மாள்.

"இல்லாவிட்டால் வேறே என்ன காரணம் எழுதுகிறது? இன்றைக்குக் கொடி கட்டுகிறேன், லீவுவேண்டும்; க்ஷவரம் பண்ணிக்கவில்லை அதனால் ஆபீஸுக்கு வர முடியாது என்றெல்லாம் எழுதச் சொல்லுகிறாயா என்ன?"

மணி காகிதத்தையும், பேனாவையும் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, "அப்பா! வீட்டுக் கணக்குப் போடணும்; நோட்டு வாங்கக் காசு தாப்பா" என்றான்.

"எல்லாம் வாங்கலாம் போடா. இரண்டு மாசம் லீவு கிடக்கிறது. இதற்குள் என்ன அவசரம்?"

மணி தலையைக் குனிந்து கொண்டு, "பட்டாபி நேத்திக்கே பத்துக் கணக்குப் போட்டுட்டான் அப்பா" என்றான்.

"சரிதாண்டா, போடான்னா—" என்று நாராயணய்யர் கையை ஓங்கினார். மணி பயந்து கொண்டு தாயாரிடம் போய் நின்றான்.

"ஏண்டா மணி! அப்பா கோபமாய் இருக்கிறபோதுதான் போய்த் தொந்தரவு பண்ணுகிறதா? நோட்டுப் மத்தியானம் வாங்கிக்கலாம்; என்னைக் கேளு. நான் காசு தரேன். அப்பாவை இப்போ தொந்தரவு பண்ணினால் பழனி மேலே வர கோபத்தை உன் முதுகிலே காண்பிச்சுடுவா" என்று ராஜம்மாள் பிள்ளையைச் சமாதானப் படுத்தினாள்.

அப்புறம் பழனி வந்தான். நாராயணய்யர் அவனை இரண்டு வசவு வைதுவிட்டு க்ஷவரம் செய்து கொண்டு ஸ்நானம் பண்ணிச் சாப்பிட்டு விட்டு வெற்றிலை போட்டுக் கொண்டே, "மணி!" என்று கூப்பிட்டார்.

"நோட்டுப் வேணுமென்றாயே வாங்கினாயா?"

"இல்லை. நீதான் காசு தரமாட்டேன்னுட்டியே."

"தரமாட்டேன் என்று எங்கேடா சொன்னேன்? போ, ஜேபியிலே காசு இருக்கு, எடுத்துண்டு போய் நோட்டுப் வாங்கிக்கோ. வெயிலாயிருக்கு, குடை

பிடிச்சுண்டு போ. பட்டு! உனக்கு நோட்புக் வேண்டியதில்லையா?"

"எனக்கு இருக்கு அப்பா" என்றான் பட்டு.

நாராயணய்யர் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டு கண் அயரும் சமயத்தில் தங்கமணி வீட்டுச் சமையற்காரன் வந்து நின்றான்.

"என்னடா சாமா, என்ன சமாசாரம்?" என்று கேட்டார்.

சாமா அசட்டுச் சிரிப்புச் சிரித்து, சங்கோசத்துடன் உடலை நெளித்துக் கொண்டே, "ஒண்ணுமில்லே; எஜமானியம்மா எனக்கு நோட்டீஸ் கொடுத்துட்டா. இந்த மாசத்தோடே நின்னு போகச் சொல்லி" என்றான்.

"அதென்னடா அது? நோட்டீஸ் கொடுத்துடவாவது? இப்பத்தானேடா நீ வந்தே? இரண்டு மூணு மாசந்தானேடா ஆச்சு?"

அவரது இரக்கமான பேச்சைக் கேட்டதும் சாமாவின் சங்கோசம் அதிகரித்தது. "ஆமாம் மாமா, இரண்டு மாசம்தான் ஆச்சு. அவாளுக்கு சமையல்காரி யாரோ வராளாம். பொம்மனாட்டியா யிருந்தா சௌகரியமா யிருக்கும்னு அம்மா பாக்கறாப் போலே இருக்கு. அவாளுக்கு எது சௌகரியமோ—"

"அது வாஸ்தவம்தானேடா? பொம்மனாட்டின்னா அது வேறே மாதிரிதான்—ஹூம், அப்போ நீ போயிடறே? வேறே இடம் ஏதாவது பார்த்து வச்சிருப்பியே?"

"இல்லே, இன்னமேத்தான் பார்க்கணும். யாராவது உங்களுக்குத் தெரிஞ்சவா சமையலுக்கு ஆள் வேணும்னு சொன்னா என்னை மறந்துடாதேங்கோ. அதுக்குத்தான் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்" என்றான் சாமா.

"ஆஹா, அதுக்கென்ன, சொல்றேன்" என்று கூறிவிட்டு நாராயணய்யர் சமையல் அறைக்குச் சென்று சாப்பிட்டுக் கொண்டிருந்த தன் மனைவியைப் பார்த்து, "அடியே! கமலா சமையல்காரி வச்சுக்கப் போறாளாம். சாமாவை வேண்டாம்னுட்டாளாம். அவனை நம்மாத்துக்கு வேணுமானா வச்சுக்கலாமே" என்றார்.

ராஜம்மாள், "சரிதான்; நமக்குப் பரிசாரகன் ஒண்ணுதான் குறைச்சல்! உங்கள் தம்பி மாசம் முன்னூறு ரூபாய் சம்பாதிக்கிறான். அவாள் இரண்டே பேர். அவாளுக்குச் சமையற்காரன் வச்சுக்கட்டும். நாம் சமையல்காரனுக்கு மாசம் பதினைந்து ரூபாய்க்கு எங்கே போகிறது? அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்" என்றாள்.

"மாசம் பதினைந்து ரூபாய்க்குப் பார்த்தால் முடியுமா? உனக்கும் அடிக்கடி உடம்புக்கு வந்து விடுகிறது. இந்த வீட்டிலே உழைக்க யாராலே முடியும்னு முணுமுணுத்துண்டே இருக்கே—"

"சரிதான், நன்னாக் கிடந்து அலையறேன். முதலில் பெண் கல்யாணத்துக்கு நிற்கிறது. அதற்குச் செலவழிக்கிறதுக்கு வழியைக் காணோம்; சமையல்காரனுக்குப் போக வேண்டியதுதான்!" என்று சொல்லி விட்டு ராஜம்மாள் "பட்டு! இந்தா, அந்த மோரை எடுத்துக் கொடு" என்று கூப்பிட்டாள்.

பட்டு வராதபடியால் நாராயணய்யரே மோரை எடுத்து அவளுக்குப் பரிமாறினார்.

சாமா தாழ்வாரத்திலிருந்தபடியே, "போயிட்டு வரேன் மாமா" என்று சொல்லிக்கொண்டு போய்ச் சேர்ந்தான்.

(தொடரும்)

---

## தப்பித்துக் கொள்வேன்!



போலீஸ் உத்தியோகஸ்தர் (புதிதாக வேலைக்கு வந்தவனைப் பார்த்து):—நீ காரில் போய்க் கொண்டிருக்கும்போது, திருடர்கள் நாற்பது மைல் வேகத்தில் ஒரு காரில் உன்னைத் துரத்திக் கொண்டு வந்தால் நீ என்ன செய்வாய்?

வேலைக்கு வந்தவன்:—ஐம்பது மைல் வேகத்தில் நான் காற்றாய்ப் பறப்பேன், ஸார்!

# பழி தீர்த்த வழி

என்.என்.

என் போட்டால் எண்ணெயாக விழும்; கொட்டகையில் அவ்வளவு நெருக்கடியான கூட்டம். எல்லோருடைய கண்களும் எதிரில் மேடை மீது கம்பீரமான தோற்றத்துடன் நின்றுகொண்டிருந்த மந்திரவாதியின் மேல் பதிந்திருந்தன.

"கனதனவான்களே! இப்பொழுது நான் செய்யப்போகும் வித்தைக்கு 'ரஸகுல்லா' என்று பெயர். இதோ பாருங்கள், இந்தத் துணியில் ஒன்றுமில்லை. இதை இந்தத் தொட்டியில் போட்டுத் தண்ணீரை ஊற்றுகிறேன் பார்த்தீர்களா? தொட்டி நிறைய ரஸகுல்லாக்கள்!" என்றான் மந்திரவாதி.

சபை பூராவும் ஆச்சரியத்தால் கரகோஷம் செய்தது. திடீரென்று எங்கிருந்தோ ஒருகுரல், "ஹூம் ..... எல்லாம் சுத்த ஹம்பக்! ...... தொட்டிக்கடியில் முன்பே ரஸகுல்லாக்களை ஒளித்து வைத்திருந்திருப்பான்! ......" என்றது.

எல்லோரும் குரல் வந்த திக்கை நோக்கித் தலைகளைத் திருப்பினர். சுமார் முப்பது வயதுடையவனும், காதில் வெள்ளைக் கடுக்கனுடனும், கையில் தங்கக் கடிகாரத்துடனும், பட்டுச் சட்டையுடனும் கூடிய ஒருவன் மேற்கூறியவாறு சொல்லி, அட்டகாசம் செய்து கொண்டிருந்தான்.

"நண்பர்களே! அடுத்ததாக இந்த வேடிக்கையைக் காண்பிக்கிறேன். இதோ, என் கையில் ஒரு பித்தளை வளையம் வைத்திருக்கிறேன். இதை இந்தச் சுத்தியால் உடைக்கிறேன். என்ன நடக்கிறது என்று கவனியுங்கள்!" என்று சொல்லிக்கொண்டே, அந்த வளையத்தைச் சுத்தியால் ஓங்கி அடித்தான் மந்திரவாதி. அடிக்க, அடிக்க, அந்த வளையத்தைப் போலவே, அளவிலும் நிறத்திலும் ஒத்த நூற்றுக் கணக்கான வளையங்கள் உண்டாயின!

மறுபடியும் சபையோர் சந்தோஷத்தாலும் ஆச்சரியத்தாலும் கரகோஷம் செய்து, ஆதரித்தனர். ஆனால் திடீரென்று மறுபடியும் அந்த பட்டுச் சட்டை போட்டுக் கொண்டிருந்த ஆசாமியின் குரல் கேட்டது.

"ஹூம் ... எல்லாம் பித்தலாட்டம்தான்! முன்பே, மேஜைக் கடியில் நிறைய வளையங்களை ஒளித்து வைத்திருக்க வேண்டும்! இல்லாவிட்டால் எங்கிருந்து இவைகள் முளைக்கும்?" என்றான்.

பிறகு, மந்திரவாதி, வரிசையாக, கோழிகள், பாம்புகள், மோதிரங்கள், பெப்பர் மிண்டுகள், மாலைகள் முதலியவைகளை வரவழைத்தான். அவன் செய்த ஒவ்வொரு வேடிக்கையையும் மற்றவர்கள் எல்லோரும் ரசித்துக் கைகொட்டி, ஆனந்தப்படுகையில், அந்த பட்டுச் சட்டைப் பேர்வழி மாத்திரம் நையாண்டி செய்து கொண்டிருந்தான்.

மந்திரவாதி பேச ஆரம்பித்தான்.

"கனவான்களே! இவ்வளவு நேரம் நான் உங்களுக்குக் காண்பித்த வித்தைகள் எல்லாம் சர்வ சாதாரணமானவை. இப்பொழுது, கடைசியாக, உங்களுக்கு ஒரு அதி அற்புதமான, மயிர்க் கூச் செறியும்படியான, வேடிக்கை செய்து காண்பிக்கப் போகிறேன். இந்தப் பெரிய வித்தையில், எனக்கு உதவி செய்ய உங்களில் யாராவது ஒருவர் வந்தால் மிகவும் சௌகரியமாக யிருக்கும்" என்று சொல்லிக்கொண்டே, அந்த பட்டுச் சட்டை ஆசாமியைப் பார்த்து, "ஸார்! ...... முடிந்தால் நீங்கள் வாருங்களேன்!" என்றான்.

அந்த ஆசாமியும், ஒரு வினாடி யோசித்து விட்டுப் பிறகு, மிகவும் அழுத்தலாக மேடை மீது ஏறினான்.

மந்திரவாதி, சபையோரைப் பார்த்துக் கொண்டே, "உங்கள் அனுமதியுடன், இதோ, இவர் அணிந்திருக்கும் தங்கக் கடிகாரத்தையும், கடுக்கன்களையும், தங்கப் பொத்தான்களையும், இந்த சுத்தியால் அடித்துப் பொடி பண்ணி இந்த டம்ளரிலுள்ள ஜலத்தில் போட்டு விடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டே, அந்த ஆசாமியிடமிருந்து மேலே சொன்ன சாமான்களை வாங்கிப் பொடி பண்ணி டம்ளரிலுள்ள ஜலத்தில் போட்டு விட்டான்.

பிறகு, சபையோரைப் பார்த்து, "இப்பொழுது இவர் போட்டுக் கொண்டிருக்கும்

சரிகை அங்க வஸ்திரத்தை உங்கள் அனுமதியுடன் வாங்கிக் கொண்டு, அதை நான்கு துண்டுகளாகக் கிழித்து, இவரை நாற்காலியில் வைத்துக் கட்டி விடுகிறேன்!" என்று சொல்லி, அப்படியே செய்தான்.

பிறகு, சபையின் பக்கம் திரும்பி, "கனதனவான்களே! நான் இப்பொழுது மேடைக்குப் பின்னால் போய் நின்று கொண்டு, ஐந்து நிமிஷங்கள் கழித்துக் கோழிபோல் கூவுவேன். அப்பொழுது, இவருடைய கட்டு அவிழ்ந்துபோகும்; சரிகை அங்க வஸ்திரம் சரியாகி, இவர் தோளில் வந்து விழும், கடிகாரம், பொத்தான்கள், கடுக்கன்கள் முதலியவை பழையபடியே சரியாகிவிடும்!" என்று சொல்லிக் கொண்டே, அங்கிருந்த சில சாமான்களை எடுத்துக் கொண்டு, மேடையின் பின் பக்கத்திலிருந்த திரையின் மறைவில் சென்றான் மந்திரவாதி.

ஐந்து நிமிஷங்கள் ஆயின: பத்து நிமிஷங்கள் ஆயின. மந்திரவாதியின் கோழி கூவுவது போன்ற குரல் கிளம்புவதாகக் காணோம்! முதலில் கொஞ்ச நேரம், 'ஏதாவது மந்திரம் ஜபித்துக் கொண்டிருக்கிறானோ?' என்று எண்ணிக் கொண்டிருந்த சிலருடைய பொறுமையும் தளர்ந்துவிட்டது.

சிலர் திரைக்குப் பின்னால் பார்த்தார்கள். மந்திரவாதியைக் காணோம்! அவன் அங்கிருந்த கதவு வழியாக மாயமாக மறைந்திருக்க வேண்டும்!



மந்திரவாதிக்குப் பதிலாக, அவர்கள் பார்த்ததெல்லாம் அங்கு கிடந்த ஒரு கடிதந்தான்.

அதில் எழுதியிருந்த விஷயமும் இதுவே.

நண்பர்களே!

நான் எவ்வளவோ சாமர்த்தியமாகப் பல வித்தைகள் காண்பித்தேன். நீங்கள் எல்லோரும் ரஸித்தீர்கள். மேடை மேல் நாற்காலியோடு பிணைக்கப் பட்டிருக்கும் நண்பர் மாத்திரம் என் மேல் நம்பிக்கையில்லாமல், நான் எல்லாவற்றையும் முன் கூட்டியே ஏற்பாடு செய்து வைத்துக் கொண்டு காண்பித்தேன் என்றார். உண்மையில் நான் எதற்கும் முன் ஏற்பாடு ஒன்றும் செய்யவில்லையாதலால், அவர் என்னை அவ்வாறு நையாண்டி செய்தது எனக்குப் பரம வேதனை அளித்தது.

அவர் என் மீது சுமத்திய அபாண்டப் பழியைத் தீர்க்கவே இந்தக் கடைசி வேடிக்கையைச் செய்யத் தீர்மானித்தேன்.

இந்த வேடிக்கையைச் செய்வதற்கு, நான் எவ்விதமான முன் ஏற்பாடும் செய்யவில்லை என்பதை அவர் கட்டாயம் ஒப்புக் கொள்வார் என்று நான் நம்புகிறேன்!

இப்பொழுது நான் செய்திருக்கும் கூத்திற்குப் பரிகாரம் எனக்குத் தெரியாது. இனி, அந்த சர்வேசுவரன் வந்தாலும் அவருடைய கடுக்கன்களும், கடிகாரமும் மற்ற சாமான்களும் பூர்வ சொருபத்தை அடைய முடியாது என்பது திண்ணம்!

என்னை ஒருவரும் தேட முயற்சிக்க வேண்டாம். நீங்கள் இந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருக்கும் பொழுது, நான் ஊர் எல்லையைத் தாண்டியிருப்பேன்!

உங்கள் ஆதரவுக்கு மிக்க வந்தனம். அந்த அகம்பாவ ஆசாமிக்கு என் மனப் பூர்வமான அனுதாபங்கள்.

தங்கள்,

மந்திரவாதி.



# குழந்தை வளர்ப்பு

**சேஷசயனி**

நான் குழந்தைகள் நிறைந்த வீட்டில் பிறந்து வளர்ந்தவள். என் புருஷரோ இதற்கு நேர் விரோதம். அவர் வீட்டிற்கு ஒரே குழந்தை. என் மாமியாருக்குப் பதினாலாவது வயதில் தலைச்சன் பிறந்து செத்துப் போயிற்று. ரொம்பச் சின்ன வயதில் தாயாக ஆகக் கூடாது என்பதற்கு அவர் ஒரு உதாரணம். அவரே ஒளிவு மறைவில்லாமல் பின் வரும் விஷயத்தைச் சொன்னது ஞாபகம் இருக்கிறது.

அந்தக் காலத்திலே என் மாமியாருக்கு வீட்டோடு இரண்டு நாத்தனார் இருந்து குடும்பத்தைக் குட்டிச் சுவர் செய்தார்களாம். மடிக்காரியம், விழுப்புக் காரியம் எல்லாம் என் மாமியாரே செய்யவேண்டும். ஆறுமாதக் குழந்தையைக் கூட அவர்கள் கவனிக்க மாட்டார்களாம். என் மாமியார் காரியம் செய்து விட்டுப் படுக்கையில் படுக்கும்போது அடித்துப் போட்டதுபோல் இருக்குமாம். "விடிய விடிய வர் வர் என்று கத்துகிற குழந்தையைக் கூடப் பார்க்கமாட்டாளோ? ஒரு பொம்மனாட்டிக்குத் தூக்கம் அவ்வளவு பெரிசா?" என்று மூன்று குழந்தைகளுடன் என் வீட்டில் வாழும் சின்ன நாத்தனார் ஏசுவாளாம். "ஐயோ, இந்தக் கஷ்டம் எத்தனை நாள்? இதாவது செத்துப் போகாதா?" என்று என் மாமியார் நினைத்தது நிஜமாயிற்றாம். இம்மாதிரி, வளரும் வயதில் தாயாராகிக் குடும்ப பாரம் வகித்தால் தாயார் உடம்பும் குழந்தை உடம்பும் ஆரோக்யமாகவே இராது.

"சுவர் நன்றாக இருந்தால்தானே சித்திரம் எழுதலாம்?" என்று அநுபவசாலியான என் பாட்டி அடிக்கடி சொல்லுவாள். இதெல்லாம் எதற்காகச் சொல்கிறேனென்றால், குழந்தை பிறந்த பின்பு மாத்திரமல்லாமல் அதற்கு முன்பும் ஒரு ஸ்திரீ தன் உடம்பைப் பார்த்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம் என்பதை வற்புறுத்துவதற்காகத் தான். சண்டையும் சச்சரவும், மனக்கவலையும் இருந்தால் கர்ப்ப ஸ்திரீக்கு வேறே வினை வேண்டியதில்லை. "வீட்டுக்கு முக்கியமானது ஸ்திரீதாம் அல்லவா?" என்பாள் என் பாட்டி.

குழந்தையின் முதல் வருஷம் அதிக சிரமமானதுதான். குழந்தையை மாத்திரம் கவனித்தால் போதாது. தாயாரையும் கவனிக்க வேண்டும். தாயார் உடம்பைப் பார்த்துக் கொண்டால் குழந்தையின் உடம்பு தன்னைத் தானே பார்த்துக் கொண்டுவிடும். ஆனால் அது தாய்ப்பால் குடிக்கும் குழந்தையாய் இருக்கவேண்டும். நர்ஸ் பால் கொடுத்தால் அவளும் தன் உடம்பைக் கவனித்துக் கொள்ளவேண்டும். அவள் புளி, காரம் முதலியன அதிகமாகச் சாப்பிடக் கூடாது.

குழந்தை கண்ணுக்கு ஆமணக்கெண்ணெய் கட்ட வேண்டும். உடம்புக்குத் தேங்காய் எண்ணெய் தேய்க்கவேண்டும். ஒரு வயது வரை சீக்காய்ப் பொடிக்குப் பதிலாக வேறே ஸ்நானப் பொடி தேய்க்கவேண்டும். குழந்தையை மற்றவர்கள் அதிக நேரம் வைத்துக் கொண்டிருந்தால் பெரியவர்களின் உஷ்ணம் தாக்கி உடம்பில் கோளாறுகள் உண்டாகும்.

"என்ன, உங்கள் வீட்டிலே சின்னக் குழந்தை இருப்பதே தெரிவதில்லை. நாலாவது வீட்டுக் கமலத்தின் குழந்தை இருப்பது எட்டு வீட்டுக்குத் தெரிகிறதே" என்று சொல்வார்கள். கமலம், ஒன்றும் தெரியாதவள். குழந்தை சரியாக, ஜீரணித்துக் கொள்ளாததைச் சிலர் கவனிப்பதே இல்லை. அது வயிறு உபாதையால் அழும்போது, "பாவம், பசி போலிருக்கிறது" என்று சொல்லித்



"இதன் நீசத்தனம் யாருக்கு உண்டு?"



''நகர்ந்தாயானால் மூக்கை அறுத்துவிடுவேன்''

கொண்டு பாலைப் புகட்டுவாள். அது வயிற்று வலியால் இன்னும் அதிகமாக அழும். "ஆறு மாஸங்கூட ஆகவில்லை. இதன் நிசத்தனம் யாருக்கு உண்டு? எப்பவும் நானே எடுத்துக் கொண்டிருக்கவேண்டும் என்கிறது. வேலைக்காரி கையில் நிற்கவே மாட்டேன் என்கிறது. பக்கத்து வீட்டுப் பாட்டியை விபூதி போடச் சொல்லிப் பாலை யானாலும் மந்திரித்துக் கொண்டு வரவேண்டும்" என்றெல்லாம் கமலம் அவஸ்தைப்படுவாள். ஆனால் அடுத்த அகத்துப் பாட்டியிடம் காண்பிப்பதற்குப் பதிலாக ஒரு குழந்தை டாக்டரிடம் போனால் பலனுண்டு என்று அவளுக்குத் தோன்றவில்லை.

குழந்தை புதிதாகக் குப்புறத்திக் கொண்டாலும், நீந்தினாலும், பல் முளைத்தாலும் அதன் ஜீரண சக்தி பாதிக்கப் படுவது சாதாரணம். குடல் ஏறிக் கொள்ளுவதும் உண்டு. அதற்குக் "குடல் தட்டு"வார்கள். இது ராக்ஷஸ வைத்தியம் என்பார்கள். ஆனால் என் அனுபவத்தில் மெதுவாகவும், ஜாக்கிரதையாகவும் செய்தால் அது குணத்தைக் கொடுக்கிறது என்றுதான் சொல்லுவேன்.

ஒரு வயதுக்கு மேல் ஆனால் "பகவான் சமத்தாக ஒரு குழந்தையைக் கொடுக்கக் கூடாதா? துரு துரு என்று மூலையிலும் முடுக்கிலும் இப்படித் திரியவேண்டுமா?" என்று சில தாய்மார்கள் கஷ்டப்படுவார்கள். என்னைக் கேட்டால், இப்படித் துருதுருவென்று இல்லாத குழந்தையின் புத்தியிலோ உடம்பிலோ ஏதோ கோளாறு இருக்கிறது என்பேன். என் மாமியார் தன் குழந்தையை ஒரு உயர்ந்த திண்ணையின் மேல் உட்கார்த்தி ஒரு உடைந்த பொம்மையைப் போட்டுவிட்டு "நகர்ந்தாயானால் பார், மூக்கை அறுத்து விடுவேன்" என்று பயமுறுத்தி விட்டுக் கவலையில்லாமல் வீட்டு வேலையைப் பார்ப்பாராம். சாயங்காலமானாலும் அந்தச் சமத்து விக்ரகம்போல் நகராமல் இருக்குமாம்!

ஒருநாள் என் ஒரு வயசு பத்மாவை நான் ஒரு நிமிஷம் பார்க்கவில்லை. அது தாழ்வாரத்து மூலையிலிருந்து "வீல்" என்று அலறிற்று. என்ன என்று பார்த்தால் சுவரில் அது ஒரு ரொம்ப சின்ன தேள் குட்டியைப் பிடித்துக் கொண்டிருந்தது.

குழந்தைகள் பயங்கொள்ளிகளாகாமல் இருக்க வேண்டுமென்றால் "பூச்சாண்டி பிசாசு" என்று பலவிதமாகச் சொல்லி அவர்களைப் பயமுறுத்தக் கூடாது.

அடுப்பு, விளக்கு, தண்ணீர்த் தொட்டி வெந்நீர்ப் பாத்திரம் முதலியவை குழந்தைகளின் பெரிய சத்துருக்கள். மிருகக் காட்சிசாலையில் "பிராணிகளைச் சீண்டாதே" என்ற விளம்பரங்களைப் பார்த்திருக்கிறோம். குழந்தைகளின் குணத்தையும் மனோ பாவங்களையும் கெடுப்பது, விளையாட்டுக்காக அவர்களை ஹிம்ஸிப்பது, மற்றவர்களின் மேலே கொண்டுள்ள கோபத்தைக் குழந்தைகளின் பேரில் காண்பிப்பது போன்ற காரியங்களைச் செய்பவர்களுக்கு முன்னாலும் "குழந்தைகளைச் சீண்டாதே" என்ற விளம்பரத்தைப் போட்டு விட வேண்டியதுதான்.

உலகத்தில் அண்டை வீட்டுச் சண்டைகளில் பாதி குழந்தைகளால் உண்டாகிறவை. ஆனால் இதில் வேடிக்கை என்னவென்றால் பெரியவர்களுக்குள் விரோதம் ஏற்பட்ட பிறகு 'ஓ' விட்ட குழந்தைகள் மறுபடியும் சிநேகமாய் ஆய்விடும்.

"பன்றியுடன் சேர்ந்த கன்றும் கெட்டதாம்" என்ற பழமொழியை ஞாபகம் வைத்துக்கொண்டு நம் குழந்தைகள் யாருடன்



இரண்டு பைகளிலிருந்தும் அமிர்தம் ......



''கணக்கிலேதான் பூஜ்யம் வாங்கிண்டு வராயே''

அநேகமாயிருக்கின்றன என்பதைக் கவனிக்க வேண்டும். குழந்தைகள் தெருவில் போய் விளையாடுவதும், எப்பொழுதும் பிறர் வீடுகளில் வசிப்பதும் கெட்ட வழக்கங்கள் என்பதை எப்பொழுதும் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும்.

கண்ணில் கண்டவற்றைக் கேட்காத குழந்தைகள் இல்லை. இதனால்தான் பழைய காலத்திலிருந்து விளையாட்டுச் சாமான்கள் செய்பவர்கள் பிழைத்து வருகிறார்கள். காலையில் குளிப்பாட்டிவிட்டு வெளுத்த உடையைப் போட்டால் அது சாப்பிடுவதற்குள் கனைத்து செம்மண்ணாகி அவிழ்க்கும் பொழுது, இரண்டு பைகளிலிருந்து — அமிர்தம் கிடைத்ததுபோல் — சிலேட்டுக் குச்சிகள், இரண்டு பக்கமும் சீவின பென்சில் ஒன்று, நூல் இரண்டு அடி சீனம், ஸெல்லுலாய்ட் பொம்மைத் தலை ஒன்று, ஊதல் ஒன்று, பௌண்டன் பேனா மூடி ஒன்று முதலியன வெளிவரும். குழந்தைகளுக்குச் சாமான்கள் சேகரிப்பதில் அவ்வளவு திருப்தி. ஆகையால் குழந்தைகள் பொம்மை முதலியன வாங்கிக் கொடுக்கச் சொன்னால் மிரட்டாமல் தங்கள் சக்திக் கேற்றவாறு ஏதாவது வாங்கிக் கொடுக்க வேண்டும்.

குழந்தைகள் பிடிவாதம் பிடிக்கிறார்கள் என்று நாமும் பிடிவாதம் பிடித்து அவர்களை அடக்கக் கூடாது. ஆபீஸ்களில்தான் அதிகாரிகளின் முரட்டுத்தனத்தின் பயனாய்க் குமாஸ்தாக்களுக்குச் சிலசமயம் கள்ள தனம் பிறக்கும். இதைத் தவிர மற்ற எல்லா இடங்களிலும் முரட்டுத் தனத்தால் முரட்டுத்தனம் தான் உண்டாகும். நாம் எப்படிக் குழந்தைகளைத் திட்டுகிறோமோ அதே மாதிரி அவை நம்மைத் திட்டுவதைக் கவனித்திருக்கிறோம்.

குழந்தைகள் மக்காகவேண்டும் என்றால் அவைகளுக்குத் தெரியும்படி செல்வம் கொண்டாடலாம். "எங்கள் பிச்சை அந்த ஜோலிக்கே போகாது. அவன் காரியமுண்டு அவன் உண்டு. அதனால்தான் அவன் கிளாஸிலே முதலாய் இருக்கிறான்?" என்பாள் அடுத்த வீட்டு மீனு. இதனால் இது மாதிரி அடிக்கடி சொல்லி வந்தால் அப்புறம் பையனுக்குக் கர்வம் தலைக்கேறி மக்காகி விடுவான் என்பதில் சந்தேகமில்லை.

குழந்தைகளை எப்பொழுதும் கோபித்துக் கொண்டு அவர்களிடம் கடுகடுப்பாக இருக்கக் கூடாது. அதனாலும் அவர்கள் புத்திமழுங்கி விடும் "பாரேண்டா, அடுத்த வீட்டு ராமு உன்னை விடச் சின்னவன். எப்படி வாசிக்கிறான்? நீயும் இருக்கிறாயே" என்று சில தாய்மார்கள் சொல்லுவார்கள். எப்பொழுதும் படி, படி, என்று கச்கவதற்குப் பயந்து தாயாரின் தலையைக் கண்டால் பாடப் புத்தகத்தைப் பார்க்காமலே வாசிப்பதுபோல் கடிக்கும் பையன்களை நான் பார்த்திருக்கிறேன். குழந்தைகளுக்குத் தானாகப் படிப்பில் ஆர்வம் உண்டாகும்படி செய்யவேண்டுமே தவிர அவர்களைக் கட்டாயப்படுத்தியோ, அடித்தோ, வைதோ படிக்கச் சொல்வது உசிதம் அல்ல.

சித்திரம், சங்கீதம் முதலியவற்றில் ஆசையுள்ள குழந்தைகளை அநேகமாக நாம் வைவது வழக்கம். "என்னடா, வாசிக்கிறதை விட்டு விட்டு எப்பொழுதும் கிறுக்கிக் கொண்டே இருக்கிறாய்? போன பரீட்சையில்தானே பெயில். இந்தத் தடவை என்ன பண்ணப் போகிறாய்?" என்றும், "எப்போ பார்த்தாலும் என்ன பாட்டு? பிழைப்பே பாட்டாயிருக்கிறதே. பொம்மனாட்டிக் குழந்தையா பாட்டுப் பாழாய்ப்போகிறது? கணக்கிலேதான் பூஜ்யம் வாங்கிண்டு வராயே. தாத்தா தான் கணக்குச் சொல்லித் தரேன் என்கிறாரே. போடுகிறதற்கு என்ன கேடு?" என்றும் சில வீடுகளில் பிள்ளைகளைக் கோபித்துக் கொள்வதைக் கேட்டிருக்கிறேன்.

இதுமாதிரி கலைகளில் குழந்தைகளுக்கு ருசி ஏற்படுவது மிக விரும்பத்தக்கது. அது வளருவதற்கு நாம் உற்சாகம் ஊட்டவேண்டுமே யன்றி, தடைசெய்வது பாதகமாகும்.





பி. யு. சின்னப்பா
டி. ஆர். ராஜகுமாரி
பாபநாசம் சிவன்
பி. எஸ். கோவிந்தன்
எம். கே. மீனலோசனி
என். எஸ். கிருஷ்ணன்
டி. ஏ. மதுரம்
நடித்தது






ஜூபிடர் பிக்சர்ஸ்

# குபேர குசேலா

டைரக்ஷன்_R.S. மணி & B.S. ராமய்யா

STUDIO_NEWTONE

# உங்கள் பாதுகாப்பிற்கு

# பீமசேனன்!



இன்று நடைபெறும் யுத்தத்தில் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள ஏ. ஆர். பி. யின் உதவியை நாடுகிறீர்கள். நீங்கள் தேடிய பொருளையும் ஐச்வர்யத்தையும் பாதுகாக்க அஜாக்ஸ் பண்டங்களை நம்புங்கள். அவை உறுதியின் உருவம் என்றால் மிகையாகாது.

இரும்புக் கோட்டை போன்றவை அஜாக்ஸ் ஸ்டீல் காபினெட்டுகள். அஜாக்ஸ் இரும்புப் பெட்டிகளோ, தீயும் திருடனும் தீண்ட முடியாதவை. உங்கள் வீட்டில் அஜாக்ஸ் பண்டங்கள் இருந்தால் உங்கள் பொருளை பீமசேனனே காத்து நிற்பது போலாகும்.

## அஜாக்ஸ்!






PRODUCTS
LIMITED

106, அரமனைக்காரத் தெரு
மதராஸ்

பிராஞ்சு :
5, வெரைட்டி ஹால் ரோடு
கோயமுத்தூர்

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy, at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.